॥ श्रीः ॥

महर्षिश्री दुर्वासः प्रणीता

# स्तुतित्रयी

ஸ்ரீ துர்வாஸ மஹரிஷி இயற்றிய

# ஸ்துதித்ரயீ



श्री ललितास्तवरत्नम्
(आर्याद्विशती)
श्रीशक्तिमहिम्नःस्तोत्रम्,
श्री स्वयंवरापार्वती
मन्त्रमालास्तोत्रं च ।

ஸ்ரீ லலிதா ஸ்தவரத்னம்
(ஆர்யாத்விசதீ)
ஸ்ரீ சக்தி மஹிம்நஃ ஸ்தோத்ரம்
ஸ்ரீ ஸ்வயம்வரா பார்வதீ
மந்த்ரமாலா ஸ்தோத்ரம்

ஸ்ரீ மஹாபெரியவாள் ட்ரஸ்ட்

॥ श्रीः ॥

महर्षि श्री दुर्वासः प्रणीता

# स्तुतित्रयी

श्री ललितास्तवरत्नम् (आर्याद्विशती)
श्रीशक्तिमहिम्नः स्तोत्रम्,
श्री स्वयंवरापार्वतीमन्त्रमालास्तोत्रं च ।

ஸ்ரீ துர்வாஸ மஹரிஷி இயற்றிய

# ஸ்துதித்ரயீ

ஸ்ரீ லலிதா ஸ்தவரத்னம் (ஆர்யாத்விசதீ)
ஸ்ரீ சக்தி மஹிம்ந: ஸ்தோத்ரம்
ஸ்ரீ ஸ்வயம்வரா பார்வதீ மந்த்ரமாலா ஸ்தோத்ரம்

தமிழுரையுடன் தொகுத்தவர்:
வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ, ஸ்ரீரங்கம்

வெளியிடுவோர்:

**ஸ்ரீ மஹாபெரியவாள் ட்ரஸ்ட்**

குருக்ருபா, 94, I.T.I. Layout, M.S.R.I.T.
பெங்களூர் - 560 054

தாரண ஆடி 2005

**STUTI TRAYI OF MAHARISHI DURVAASA**

SRI LALITHA STAVARATNAM
SRI SAKTI MAHIMNAS STOTHRAM and
SRI SVAYAM VARA PARVATIMANTRAMALA STOTHRAM

First Edition : 500 copies

Compiled with Tamil Commentary by

Vaidya **S.V. Radhakrishna Sastri,** Srirangam

Published by

**SRI MAHAPERIYAVAL TRUST**

Gurukrupa, 94, I.T.I. Layout, MSRIT

Bangalore 560 054

Copies available at :

**Smt. P. VIJAYA**

D.No. 11, Plot 7, Ganapathy Street,

St.Thomas Nagar, Madipakkam,

Chennai - 600 091

Price : **Rs. 40/-**

---

LAsertypeset & Printed at :
**V.K.N. ENTERPRISES,**
Old 8/1, Dr. Rangachari Rd., Mylapore, Chennai-4 Ph:24950775

# ஸமர்பணம்

பரம கருணையையும் பரஜ்ஞானத்தையுமே திருவுருவாகக் கொண்ட ஆதிகுருவான ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தியின் பிரத்யக்ஷ திவ்யலீலா மானுஷவிக்கிரஹமான ஸத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பூஜ்யஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமஹாபெரியவாள் ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களுக்கும் அவர்கள் அனவரதமும் அனன்யப்ரேம பக்தியுடன் ஆராதித்துவந்த ஸ்ரீகாமாக்ஷீ ஜகன் மாதாவிற்கும். ஸமர்பணம்

# गुरुमूर्ते त्वां नमामि कामाक्षि

ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடத்திபர்களான ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய பரமபூஜ்ய ஸ்ரீமஹா பெரியவாளின் பரம கருணையின் பயனாக பூஜ்ய ஸ்ரீ ஜகத் குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களின் அருளாசியுடனும் பூஜ்ய ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களின் அருளாசியுடனும் ஸ்ரீமஹாபெரியவாள் டிரஸ்ட் மஹரிஷி துர்வாஸர் இயற்றிய ஸ்ரீலலிதாஸ்தவரத்னம் எனும் ஆர்யா த்விசதீ, ஸ்ரீ சக்தி மஹிம்ந: ஸ்தோத்திரம், ஸ்ரீ ஸ்வயம்வரா பார்வதீ மந்த்ரமாலா ஸ்தோத்திரம் என்ற மூன்று ஸ்தோத்திரங்களையும் தமிழுரையுடன் வெளியிடுகிறது.

மஹரிஷி துர்வாஸர் ஆதி தம்பதிகளான அத்ரிமஹர்ஷிக்கும் அனஸூயா தேவிக்கும் சிவாம்சத்தில் புத்திரனாகத் தோன்றியவர். விஷ்ணுவின் அம்சத்தில் பிறந்த தத்தரும் (தத்தாத்ரேயரும்) பிரும்மாவின் அம்சத்தில் பிறந்த ஸோமனும் இவருக்கு ஸஹோதரர்கள் எனப்புராணம் கூறும். அந்த ஆதிதம்பதியரிடம் புதல்வர்களாகப் பிறப்பதற்கு மும்மூர்த்திகளும் தாமே இசைந்து அத்திரி ஆசிரமத்திற்கு எழுந்தருளி அனஸூயா தேவியிடம் தம் கருத்தை வெளியிட்டனராம்.

ஓரிடத்தில் தங்கியிராமல் உலகத்தைச் சுற்றி வருபவரானதால் எங்குமிருப்பவர் என்பதாலும் அணிகிற ஆடையில் கருத்தின்றித் தன்னை மறந்து, எதனையும் பொருட்படுத்தாது, வலம் வந்தவர் என்பதாலும் உலகம் அவரை துர்வாஸர் என்றழைத்தது. நல்லதல்லாதகைக் காணப்பொறுக்காமல் தட்டிக்கேட்கும் உரிமை எடுத்துக்கொண்டு உலகை ஆள்கிற பொறுப்பில் உள்ளவர்களை நல்வழிப்படுத்தக் கோபமெனும் கவசம் பூண்டு சபித்து வழிப்படுத்தி அருள்கிற பாங்குள்ளவரானதால் ''குரோதபட்டாரகர்'' என இவரைக் குறிப்பிடுவர். (பட்டாரகர் - பிடாரர் - பொறுப்புமிக்க பேராளுமை பெற்றவர் பெருமதிப்பிற்குரியவர்.) இவரது கோபம் விளைவித்த நற்பயனாக திருப்பாற்கடலைக்

# முன்னுரை

கடைந்து அமுதம் பெற்றுத் தேவர் இறப்பற்றவராயினர் - அமரராயினர். துர்வாஸரின் சாபம் பெற்றவர்களின் வரலாறுகள் பல உண்டு. தெய்வ அருளைப்பெற வாய்ப்பிருந்தும் திமிரால் மதர்த்து அந்த வாய்ப்பைத் தவற விட்டவர்களைத் திருத்தி நல்வாழ்வு அளிக்கத் தெய்வ அருளைக் கைகளில் ஏந்தி உலகை வலம் வந்தவர்.

ஸ்ரீவித்யை மந்திரத்தைக் கண்டறிந்த பன்னிரு உபாஸகர்களில் முக்கியமானவர். காஞ்சியில் தவக் காமாக்ஷியாக பீடத்தில் மறைந்திருந்த தேவியை அருள்வடிவுடன் உலகைக்காக்கின்ற ஸ்ரீமாதாவாக அமைத்து எளிய சிறந்த வழிபாட்டு முறையைக்காட்டி ஆலயம் கொள்ளச் செய்தவர். இந்நூலில் முதலாவதான ஸ்ரீலலிதாஸ்தவரத்தினம் தேவியை நம் உள்ளத்தில் உருவகப்படுத்திக் காணச் செய்கிறது. மன்மதன் சிவாபராதத்தால் சாம்பலானன். சிவ கணத்தலைவர் ஒருவர் அந்தச் சாம்பலை உருட்டி மனிதவடிவில் அமைத்தார். சிவனது அருட்பார்வையில் அதுபட்டதும் பண்டாஸுரனுகியது. சுக்கிராசாரியரின் வழிகாட்டலில் மூவுலகையும் வென்று உலகைத் தன் நிலையில் கட்டுப்படுத்துகிற தெய்வ சக்திக்கு எதிராக அவன் செயல்பட்டான். தெய்வப் பணிக்காக வெளிப்பட்ட (தேவகார்ய ஸமுத்யதா) தேவி ஸ்ரீலலிதா அவனை அடக்கி ஸ்ரீமஹா ராஜ்ஞியாக ஸ்ரீமத்ஸிம்ஹாஸனத்தில் அமரத் தனக்கென அமைந்திருந்த மேருவின் உயர்ந்த நடுசிகரத்தில் (ஸுமேரு மத்த்யச்ருங்கஸ்த்தா) அமைந்திருந்த ஸ்ரீ நகரத்தில் ஸ்ரீ சக்ரராஜவடிவில் அமைந்த பீடத்தில் அமர்ந்தாள்.

மேருமலை அனேககோடி பிரும்மாண்டங்களின் ஆதாரமாக அவற்றின் நடுவிலுள்ளது. இவ்வுலகங்கள் அனைத்திற்கும் வடக்கில் அமைந்திருப்பது. தெற்கு தாழ்ந்தது. வடக்கு எப்போதும் மேடிட்டு உயர்ந்தது. வடக்கில் உள்ள மலையானதால் மேலும் உயர்ந்தது. அதன் உயர்ந்த சிகரத்தில் ஒன்றன் மீது மற்றென்றுக இருபத்தைந்து கோட்டைகளின் இடையே

## முன்னுரை

*மஹாபத்மாடவி என்ற தாமரைக் காட்டினிடையே சிந்தாமணி கிருஹத்தில் வரிசையாக அமைந்த ஒன்பது ஆவரணங்களுக்கு நடுவில் ஸர்வாநந்த மயபீடத்தில் தேவி அமர்ந்துள்ளாள்.*

*சதுரவடிவில் அமைந்த ஸ்ரீநகரம் ஆயிரத்தறுநூறு யோசனை பரப்புள்ளது. இருகோட்டைகளுக்கிடையே உள்ள இடைவெளி ஏழுயோசனை தூரம். கோட்டைகள் முதலாவதைவிட இரண்டாவது உயரத்தில் அமைந்திருக்கும். தேவியைக் காணவருகிறவர்களை 64 கோடியோகினிகள் தக்க நிலைக்கு உயர்த்தி அழைத்துச் செல்வர். அனைத்து தெய்வ சக்திகளும் அங்கே குடிகொண்டவை. ஆகாயம் போல் எல்லையற்று விரிந்துகொண்டேபோகிற திவ்வியக் காட்சியை துர்வாஸர் படிப்படியாகக் கைபிடித்து அழைத்துச் சென்று ஸ்ரீலலிதாஸ்தவரத்தினத்தின் மூலம் தேவியின் அருகாமையை அடைவிக்கிறார்.*

*அவர் வழிசெல்கிற நாமும் பிந்துவின் நடுவே பேரழகரான காமேசுவரரின் மடியில் பேரழகியான காமேச்வரி அமர்ந்துள்ள திருக்கோலத்தை 148-191 சுலோகங்களின் மூலம் உள்ளே பதிப்போம். 192-197 சுலோகங்களால் அவளை வணங்கி வாழ்வை அவளிடம் ஒப்படைப்போம். 198-207 சுலோகங்ளால் தேவி நம்மை அரவணைத்துக்கட்டிக்காப்பதை உணர்வோம். தினமும் இவ்வாறு மனனம் செய்ய தெய்வ அருட்சூழலில் நிற்போம்.*

*அண்டத்திலுள்ளது பிண்டத்திலே என்ற திருவாக்குப்படி உலகனைத்தையும் உள்வாங்கி அதனதன் உருவில் அததனைக் கொள்கிற உள்ளத்தில் தேவியைக் காணும் வகையையும் காட்டுகிறார். முதலில் ஸ்ரீநகரத்தின் வரைகோடுபோல் காணப்பட்டாலும் பாவனையின் வலிவால் உண்மையில் உயிருள்ள - முழு உருவம் பெற்ற - உணர்வாக அது அமைவதை ஸாதகர் உணர்வர். ஸ்தூல உருவில் படம் போன்று கண்ட ஸ்ரீநகரத்தில் அமர்ந்த தேவியின் உருவம் அதிஸூக்ஷ்மமான உணர்வாக*

# முன்னுரை

பிரஜ்ஞானமாக பிரும்மஜ்ஞானமாக மெள்ளமெள்ள உணரப் பெறக் கூடும். ஸ்ரீலலிதாஸ்தவரத்தினம் காட்டும் சிறப்பு இது. ஆர்யா என்ற விருத்தத்தில் அமைந்தது 213 பாக்கள் கொண்டது. அதனால் ஆர்யாதுவிசதீ என்ற பெயரும் உண்டு.

இதில் இடம் பெறுகிற துர்வாஸமஹரிஷியின் இரண்டாவது ஸ்தோத்திரம் ஸ்ரீசக்திமஹிம்ந: ஸ்தோத்திரம் 61 சுலோகங்கள் கொண்ட இது தேவியின் பெருமையை விளக்குவது. புஷ்பதந்தரின் சிவமஹிம்ந: ஸ்தோத்திரத்தின் இணையாக இதனைத் தினமும் மனனம் செய்வர். தேவியின் வழிபாட்டிற்குகந்த மந்திரங்கள் பல உண்டு. அவற்றில் பாலா ஷோடசீ மஹாஷோடசீ, முதலியவை புகழ்பெற்றவை. மந்திரம் பல அக்ஷரங்களால் உருவானதெனினும் அதிலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் தேவியின் சக்திமிக்க உருவமாக மனனம் செய்வதும் மிகச் சிறந்த பலன் தருவதே. அதேபோன்று ஸ்ரீசக்ரவடிவில் தியானம் செய்வதும் மிக உத்தமமானது. ஆனால் பேராற்றல் மிக்க இவற்றை உணரத்தகுதியுள்ளவர் மட்டுமே உணரக் கூடுமானதால் அத்தகுதிபெற குருவருள் அவசியம். தேவியே குருவாய் வருவாள் என்பதே அனுபவம் உணர்த்துகிற உண்மை. ஸ்ரீ மஹாபராப்ராஸாத வித்யையான தேவி குருவடிவம் பெறுகிறாள்.

மந்திரத்தின் மூலம் உணரப்பெறுகிற தேவியின் வடிவழகும் ஸாதகனின் உள்ளத்துநோக்கில் புலப்படும். பாதாதி கேசாந்தம் அந்த அழகை அனுபவிக்கவும் இந்தத் துதி வழிகாட்டுகிறது. பெரியோர்கள் உள்ளத்து உணர்வு விழித்துள்ளவர்களால் மட்டுமே இவளை உணர முடியும் என்பர். அதுவும் சில நாட்பழக்கத்தால் தேறாது. குருவருளும் தேவியின் அருளும் அதனைக் கூட்டுவிக்கும் என்பதே இந்த ஸ்தோத்திரம் தரும் விளக்கம்.

மூன்றாவதாக அமைந்தது ஸ்வயம்வரா பார்வதியின் மாலாமந்திர ஸ்துதி. இமவானின் குமரியாகக் தோன்றிய தேவி சிறுபிள்ளைப்பருவத்திலேயே சிவனது இனிய சக்தியாகத்தான் தோன்றியுள்ளதை உணர்ந்து தன்

## முன்னுரை

தவத்தால் சிவனைக் கணவராக வரித்துப் பெரும் முயற்சியால் சிவனை மணந்தாள். ஒவ்வொரு பருவத்திலும் சிவனிடம் அவள் காட்டிய பேரன்பை இந்தத்துதி படிப்படியாக விளக்கி அது பயன்பெற்று முழுமை பெற்றதும் அடைந்த பெருநிலையையும் விளக்குகிறது. கன்னிகைகள் நல்ல கணவனைப்பெற, நல்ல தாம்பத்யம் பெற்று தெய்வத்தன்மை மிக்க வாழ்க்கை பெற இதனை மனனம் செய்வர். 48 சுலோகங்களாலான இதன் பாராயணம் ஆனந்தம் நிறைந்த பெருவாழ்வைத் தரும். ஸ்வயம்வரா பார்வதியின் தியானவடிவும் அவளது மந்திரமும் ஸ்ரீமத் பாகவதத்தில் கோபியிரும் ருக்மிணியும் நந்த நந்தனனை மணாளனாகப் பெற காத்யாயனியிடம் வேண்டிய சுலோகங்களும் இடம் பெறுகின்றன.

மங்களமும் ஆனந்தமும் நிறைந்த நல்வாழ்க்கைபெற துர்வாஸர் தந்த அன்பளிப்பு இது. தெய்வ அருள்பெற விழைபவருக்கு உறுதுணை.

ஸ்ரீகுருவரர்களான ஸ்ரீ காஞ்சீகாமகோடி பீடத்ததிபர்களான ஸ்ரீசரணர்களின் ஸ்ரீ சரணங்களில் இதனை ஸமர்ப்பிக்கிறோம்.

22. வீரேச்வரம்
அப்ரோச்ரோடு
ஸ்ரீரங்கம் 620006

S.V. ராதாகிருஷ்ணசாஸ்திரீ

# ।। श्री ललितास्तवरत्न पारायण क्रमः ।

वन्दे गजेन्द्रवदनं वामाङ्कारूढ वल्लभाश्लिष्टम्।
कुङ्कुमपराग शोणं कुवलयिनीजार कोरकापीडम्।। (१)

अस्य श्रीललितास्तवरत्नमालामहामन्त्रस्य । भगवान् श्रीदुर्वासा ऋषिः । पंक्तिः छन्दः । सपरिवारश्रीललिता-महात्रिपुरसुन्दरी देवता ।।

ऐं तापिञ्छमेचकाभां तालीदलरचित कर्णताटङ्काम्।
तांबूलपूरितमुखीं ताम्राधरबिंबदरहासाम्।। (३१) बीजम्

सौः धूर्तानामतिदूरा वार्ताशेषावलग्न कमनीया।
आर्तालीशुभदात्री वार्ताली भवतु वाञ्छितार्थाय।। (६८) शक्तिः ।।

क्लीं आदिमरसावलंबां अनिदंप्रथमोक्तिवल्लरीकलिकाम्।
आब्रह्मकीटजननीमन्तः कलयामि सुन्दरीमनिशम्।। (१६९)
— कीलकम्

मम सपरिवारश्रीललितामहात्रिपुरसुन्दरीप्रसादसिद्धिद्वारा सर्वाभीष्टसिद्ध्यर्थे पारायणे विनियोगः ।

कुङ्कुमललामभास्वन्निटिलां कुटिलतरछिल्लिकायुगलाम्।
नालीकतुल्यनयनां नासाञ्चलनटितमौक्तिकाभरणाम्।। (१६१)

अङ्गुष्ठाभ्यां नमः । हृदयाय नमः ।

अङ्कुरित मन्दहासां अरुणाधरकान्तिविजितबिम्बाभाम्।।
कस्तूरीमकरीयुतकपोलसंक्रान्तकनकताटङ्काम्।। (१६२)

तर्जनीभ्यां नमः । शिरसे स्वाहा ।

कर्पूरसान्द्रवीटीकबलितवदनारविन्दकमनीयाम्।
कम्बुसहोदरकण्ठप्रलम्बमानाच्छमौक्तिककलापाम्।। (१६३)

मध्यमाभ्यां नमः । शिखायै वषट्।

कल्हारदामकोमल भुजयुगल स्फुरित रत्नकेयूराम् ।
करपद्ममूलविलसत् काञ्चनमयकटकवलयसंदोहाम् ।। (१६४)

अनामिकाभ्यां नमः । कवचाय हुं ।

पाणिचतुष्टयविलसत्पाशाङ्कुशपुण्ड्रचापपुष्पास्त्राम् ।
कूलङ्कषकुचशिखरां कुङ्कुमकर्दमितरत्नकूर्पासाम् ।। (१६५)

कनिष्ठिकाभ्यां नमः । नेत्र त्रयाय वौषट् ।।

कमलभवकञ्जलोचनकिरीटरत्नांशुरञ्जितपदाब्जाम् ।
उन्मस्तकानुकम्पामुत्तरलापाङ्गपोषितानङ्गाम् ।। (१६८)

करतलकरपृष्ठाभ्यां नमः । अस्त्राय फट् ।
भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः ।

।। ध्यानम् ।।

आदिमरसावलम्बाम् अनिदंप्रथमोक्तिवल्लरीकलिकाम् ।
आब्रह्मकीटजननीं अन्तः कलयामि सुन्दरीमनिशम् ।। (१६९)

नतजनसुलभाय नमो नालीकसनाभिलोचनाय नमः ।
नन्दितगिरिशाय नमो महसे नवनीपपाटलाय नमः ।। (१९२)

पवनमयि पावकमयि क्षोणीमयि गगनमयि कृपीटमयि ।
रविमयि शशिमयि दिङ्मयि समयमयि प्राणमयि शिवे पाहि ।। (२०६)

कालि कपालिनि शूलिनि भैरवि मातङ्गि पञ्चमि त्रिपुरे ।
वाग्देवि विन्ध्यवासिनि बाले भुवनेशि पालय चिरं माम् ।।
(२०७)

लमित्यादि पञ्चपूजा ।। (स्तोत्र पारायणानन्तरं हृदयादिन्यासं विधाय ध्यात्वा, पञ्चोपचारैःसंपूजयेत् ।।)

உ

श्रीमात्रे नमः

# १. श्रीललितास्तवरत्नम्

## महर्षिदुर्वासःप्रणीतम्

ஸ்ரீலலிதாஸ்தவரத்னம் மஹரிஷிதுர்வாஸர் இயற்றியது

**वन्दे गजेन्द्रवदनं वामाङ्कारूढवल्लभाश्लिष्टम्।**
**कुंकुमपरागशोणं कुवलयिनीजार-कोरकापीडम्॥**

வந்தே கஜேந்த்ரவதநம்
வாமாங்காரூட வல்லபாச்லிஷ்டம் ।
குங்கும பராகசோணம்
குவலயினீ ஜாரகோரகாபீடம் ॥

*இடது மடியில் ஏறி அமர்ந்த வல்லபாதேவியால் அணைக்கப்பெற்றவரும், குங்குமப்பூத்தூள் போன்று சிவந்தவரும் செவ்வல்லிப்பூவின் காதலனை சந்திரனின் மொட்டு போன்ற கீற்றைச் சிரத்தில் சூடியவருமான சிறந்தயானை முகத்தோனை வணங்குகிறேன். (1)*

**स जयति सुवर्णशैलः सकलजगच्चक्र संघटितमूर्तिः।**
**काञ्चन निकुञ्जवाटी कन्दलदमरीप्रपञ्च संगीतः॥**

ஸ ஜயதி ஸுவர்ணசைல:
ஸகலஜகச் சக்ரஸங்க்கடிதமூர்த்தி: ।
காஞ்சன நிகுஞ்ஜவாடீ
கந்தல தமரீ ப்ரபஞ்ச ஸங்கீத: ॥

*மேரு தங்கமலை. அதன் உருவினுள் அனைத்து உலக மண்டலங்களும் வரிசையாகத் தம் தமது இடங்களில் பொருந்தி ஒன்றோடொன்று இணைந்து அமைந்துள்ளன. மலையைச் சுற்றியுள்ள கொடி வீடுகளில் அமர்ந்து தேவமாதர் கூட்டம் அதன் புகழைப்பாடுகின்றது. அந்த தங்கமலை சிறந்து விளங்குகிறது. (2)*

हरिहयनैर्ऋतमारुतहरितां अन्तेष्ववस्थितं तस्य।
विनुमः सानुत्रितयं विधिहरिगौरीशविष्टपाधारम्॥

ஹரிஹயநைர்ருதமாருத
ஹரிதாம் அந்தேஷ்வவஸ்த்திதம் தஸ்ய ।
விநும: ஸாநுத்ரிதயம்
விதிஹரிகௌரீச விஷ்டபாதாரம் ॥

*அந்த மேருவின் கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு திசைகளின் எல்லையில் பிரும்மலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் என இவை அமைந்துள்ள இடமான மூன்று சிகரங்களையும் வணங்குகிறோம். (3)*

मध्ये पुनर्मनोहर रत्नरुचिस्तबक रञ्जितदिगन्तम्।
उपरि चतुः शतयोजनं उत्तुंगं शृंगपुंगवं उपासे॥

மத்த்யே புநர்மநோ ஹர
ரத்நருசி ஸ்தபக ரஞ்ஜித திகந்தம் ।
உபரி சதுச்சதயோஜநம்
உத்துங்கம் ச்ருங்க புங்கவம் உபாஸே ॥

*இந்த மூன்று சிகரங்களின் இடையே மனத்தைக் கவர்கிற தனது ரத்தின ஒளிக் கொத்துகளால் திக்கெட்டின் எல்லைகளையும் சிவக்கச் செய்வதும் நானூறு யோஜனை உயரமுள்ளதுமான சிறந்த சிகரத்தை வழிபடுகிறேன். (ஒரு யோஜனை சுமார் 13 கிலோமீடர்.) (4)*

तत्र चतुः शतयोजनपरिणाहं देव शिल्पिना रचितम्।
नानासालमनोज्ञं नमाम्यहं नगरं आदिविद्यायाः॥

தத்ர சதுச்சத யோஜந
பரிணாஹம் தேவ சில்பிநா ரசிதம் ।
நாநாஸால மநோஜ்ஞம்
நமாம்யஹம் நகரமாதிவித்யாயா: ॥

*அதன் மீது நானூறு யோஜனை பரப்புள்ள ஆதிவித்யையின் நகரம் தேவசில்பியான விச்வகர்மாவால்*

*நிறுவப்பட்டது. பல கோட்டைகளால் அழகான அதனை நான் வணங்குகிறேன். (கோட்டை - பிராகாரம் - அரண் - மதில்) (5)*

प्रथमं सहस्रपूर्वक षट्शतसंख्याक योजनं परितः ।
वलयीकृतस्वगात्रं वरणं शरणं व्रजाम्ययो रूपम् ॥

ப்ரதமம் ஸஹஸ்ரபூர்வக
ஷட்சத ஸங்க்க்யாக யோஜநம் பரித: ।
வலயீக்ருதஸ்வகாத்ரம்
வரணம் சரணம் வ்ரஜாம்யயோ ரூபம் ॥

*ஆயிரத்து அறுநூறு யோஜனையளவு சுற்றி நகர வெளியை வளைத்துள்ள இரும்பாலான முதல் கோட்டையைச் சரணடைகிறேன். (6)*

तस्योत्तरे समीरणयोजनदूरे तरंगितच्छायः ।
घटयतु मुदं द्वितीयो घण्टास्वनसार निर्मितः सालः ॥

தஸ்யோத்தரே ஸமீரண
யோஜந தூரே தரங்கிதச் சாய: ।
க்கடயது முதம் த்விதீயோ
க்கண்டாஸ்வநஸார நிர்மித: ஸால:॥

*(மேருவின் தெற்கில் உலகங்களனைத்தும் உள்ளன. உலகிலிருந்து மேருவினுள் நுழைபவன் வடக்கு நோக்கிச் செல்கிறான்.) அதனுள் வடக்கே ஏழு யோஜனை இடைவெளிவிட்டு வடக்கே நிழலைப் பரப்புகிற வெண்கலத்தாலான இரண்டாவது கோட்டை உள்ளது. அது மகிழ்ச்சியைத் தரட்டும். (7)*

उभयोरन्तरसीमनि उद्दामभ्रमररञ्जितोदारम् ।
उपवनमुपास्महे वयं ऊरीकृतमन्दमारुतस्यन्दम् ॥

உபயோ ரந்தரஸீமநி
உத்தாமப்ப்ரமர ரஞ்ஜிதோதாரம் ।
உபவநம் உபாஸ்மஹே வயம்
ஊரீக்ருத மந்தமாருதஸ்யந்தம் ॥

*இவ்விரு கோட்டைகளின் இடையே முரட்டு வண்டுகளின் ரீங்காரத்தால் இனியதும் மென்காற்று எங்கும் பரவி இதமாயிருப்பதுமான பூங்காவை நாம் வழிபடுவோம். (8)*

**आलिंग्य भद्रकालीं आसीनस्तत्र हरिशिलाश्यामाम्।**
**मनसि महाकालो मे विहरतु मधुपानविभ्रमन्नेत्रः ॥**

ஆலிங்க்ய பத்ரகாளீம்
 ஆஸீநஸ் தத்ர ஹரிசிலாச்யாமாம் ।
மநஸி மஹாகாலோ மே
 விஹரது மதுபான விப்ப்ரமந்நேத்ர: ॥

*பச்சை ரத்னம் போன்ற மேனிநிறம் கொண்ட பத்ரகாளியை அணைத்து அமர்ந்துள்ள மஹாகாளர், மதுவருந்தலால் சுழல்கின்ற கண்கள் உள்ளவர். அவர் என் உள்ளத்தில் விளையாடட்டும். (9)*

**तार्तीयीको वरणः तस्योत्तरसीम्नि वातयोजनतः।**
**ताम्रेण रचितमूर्तिः तनुताद् आचन्द्रतारकं भद्रम्॥**

தார்தீயீகோ வரண:
 தஸ்யோத்தரஸீம்நி வாதயோஜநத: ।
தாம்ரேண ரசித மூர்தி:
 தநுதாத் ஆசந்த்ரதாரகம் பத்ரம் ॥

*வெண்கலக் கோட்டைக்குள் ஏழு யோஜனை இடைவெளிவிட்டுத் தாம்ரத்தால் உருவான மூன்றுவது கோட்டை சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ளளவும் மங்களம் புரியட்டும். (10)*

**मध्ये तयोश्च मणिमयपल्लव शाखाप्रसून पक्ष्मलिताम्।**
**कल्पानोकहवाटीं कलये मकरन्द पङ्किलावालाम्॥**

மத்த்யே தயோச்ச மணிமய
 பல்லவ சாகாப்ரஸூன பக்ஷ்மலிதாம் ।
கல்பாநோகஹவாடீம்
 கலயே மகரந்த பங்கிலா வாலாம் ॥

வெண்கல-தாம்ரக் கோட்டைகளுக்கிடையே ரத்தினங்களாலான துளிர் கிளை பூ இவற்றால் அழகியதும் பூந்தாதுவால் சேறு மிக்க பாத்திகள் கொண்டதுமான கற்பகமர வரிசையை உருவகப்படுத்திக் கொள்கிறேன். *(11)*

तत्र मधुमाधवश्रीतरुणीभ्यां तरुणदृक्चकोराभ्याम्।
आलिङ्गितोऽवतान्मां अनिशं प्रथमर्तुरात्तपुष्पास्त्रः ।।

தத்ர மதுமாதவஸ்ரீ
தருணீப்ப்யாம் தருண த்ருக் சகோராப்ப்யாம் ।
ஆலிங்கிதோऽவதான்மாம்
அநிசம் ப்ரதமர்து ராத்தபுஷ்பாஸ்த்ர: ॥

*அந்த கற்பகத் தோட்டத்தில் இளமை மிக்க சகோரபட்சி போன்ற கண்கள் உள்ள மது ஸ்ரீ மாதவஸ்ரீ என்ற இளம் பெண்களால் அணைக்கப்பெற்ற முதலாம் ருதுவான வஸந்தன் பூவாகிய அம்புகளை ஏந்தியுள்ளார். அவர் என்னை எப்போதும் காக்கட்டும். (மதுஸ்ரீ-சித்திரைமாதத்து தேவி, மாதவஸ்ரீ வைகாசமாதத்து தேவி) (12)*

नमत तदुत्तरभागे नाकि पथोल्लंघि शृङ्ग सङ्घातम्।
सीसाकृतिं तुरीयं सितकिरणालोक निर्मलं सालम् ।।

நமத ததுத்தரபாகே
நாகி பதோல்லங்க்கி ச்ருங்க ஸங்க்காதம் ।
ஸீஸாக்ருதிம் துரீயம்
ஸித கிரணாலோக நிர்மலம் ஸாலம் ॥

*அதன் வடக்கில் தேவர் செல்லும் பாதையைத் தாண்டிச் செல்கின்ற கொடுமுடிகள் கொண்டதும் வெண்ணிற நிலவில் தூயதாகக் காண்பதுமான ஈயக்கோட்டையை வணங்குவீர். (13)*

सालद्वयान्तराले सरलालिकपोत चाटुसुभगायाम्।
सन्तानवाटिकायां सक्तं चेतोऽस्तु सततमस्माकम् ।।

ஸாலத்வயாந்தராலே
　　ஸரளாலிகபோத சாடுஸுபகாயாம் ।
ஸந்தான வாடிகாயாம்
　　ஸக்தம் சேதோऽஸ்து ஸததமஸ்மாகம் ॥

*தாம்ர-ஈயக்கோட்டைகளுக்கிடையே வண்டுகளும் புறுக்களும் இனிது விளையாடுவதால் அழகிய ஸந்தானத் தோட்டத்தில் நம் மனம் எப்போதும் பதிந்திருக்கட்டும். (தேவருலகில் உள்ள கற்பகமரங்களில் ஸந்தானம் என்பதும் ஒன்று.) (14)*

तत्र तपनातिरूक्षः सम्राज्ञीचरण सान्द्रित स्वान्तः ।
शुक्र शुचिश्रीसहितो ग्रीष्मर्तु र्दिशतु कीर्तिमाकल्पम् ॥

தத்ர தபநாதிரூக்ஷ:
　　ஸம்ராஜ்ஞீ சரணஸாந்த்ரிதஸ்வாந்த: ।
சுக்ர சுசிஸ்ரீஸஹிதோ
　　க்ரீஷ்மர்துர் திசது கீர்த்திமாகல்பம் ॥

*அங்கு சூரியனின் வெப்பத்தால் வரண்டவரும் பேரரசியான தேவியின் திருவடிகளை நினைத்து நெகிழ்ந்தவரும் சுக்ரஸ்ரீ, சுசிஸ்ரீ என்ற தேவியருடன் கூடியவருமான க்ரீஷ்மருது கல்பகாலம் வரை புகழை வழங்கட்டும். (சுக்ரஸ்ரீயும் சுசிஸ்ரீயும் ஆனி-ஆடி மாதத்து தேவிகள். (15)*

उत्तरसीमनि तस्योन्नतशिखरोत्कंपि हाटकपताकः ।
प्रकटयतु पञ्चमो नः प्राकारः कुशलमारकूटमयः ॥

உத்தரஸீமநி தஸ்யோந்நத
　　சிகரோத்கம்பி ஹாடகபதாக: ।
ப்ரகடயது பஞ்சமோ ந:
　　ப்ராகார: குசலமாரகூட மய: ॥

*அதனைத் தாண்டி உயர்ந்த சிகரத்தில் ஆடிக் கொண்டிருக்கிற தங்கக் கொடியுள்ள ஐந்தாவது பித்தளைக் கோட்டை நமக்கு நலம் புரியட்டும். (16)*

प्राकारयोश्च मध्ये पल्लविताऽन्यभृतपञ्चमोन्मेषा।
हरिचन्दनद्रुवाटी हरतादुन्मूलमस्मदनुतापम्॥

ப்ராகாரயோச்ச மத்த்யே
பல்லவிதாऽந்யப்ருத பஞ்சமோன்மேஷா।
ஹரி சந்தநத்ருவாடீ
ஹரதாதுந்மூல மஸ்மதநுதாபம் ॥

*ஈய-பித்தளைக் கோட்டைகளுக்கிடையே துளிர்த்த ஹரிசந்தன மரத்தோட்டம் குயில்களின் பஞ்சமஸ்வரக் கூவலால் இனியதாக உள்ளது. அது நமது உள்ளத்துக் கொதிப்பை வேருடன் களையட்டும். (ஹரிசந்தனம் கற்பகமரவகையைச் சார்ந்தது.) (17)*

तत्र नभःश्रीमुख्यैः तरुणीमुख्यैः समन्वितः परितः।
वज्राट्टहासमुखरो वाञ्छापूर्तिं तनोतु वर्षर्तुः॥

தத்ர நப:ஸ்ரீமுக்க்யை:
தருணீமுக்க்யை: ஸமந்வித: பரித: ।
வஜ்ராட்ட ஹாஸமுகரோ
வாஞ்ச்சாபூர்திம் தநோது வர்ஷர்து: ॥

*அங்கு நப: ஸ்ரீ (நபஸ்யஸ்ரீ) முதலிய சிறந்த யுவதிகள் சுற்றிச் சூழ்ந்திருக்கின்ற வர்ஷருது இடி முழக்கம் மிக்கவராக உள்ளார். அவர் நமது விருப்பங்களை நிறைவுறச் செய்யட்டும். (நப: ஸ்ரீயும் நபஸ்ய ஸ்ரீயும் ஆவணி-புரட்டாசி மாதத்துத் தேவிகள்) (18)*

मारुतयोजनदूरे महनीयस्तस्य चोत्तरे भागे।
भद्रं कृषीष्ट षष्ठः प्राकारः पञ्चलोहधातुमयः॥

மாருதயோஜன தூரே
மஹநீயஸ் தஸ்ய சோத்தரே பாகே ।
பத்ரம் க்ருஷீஷ்ட ஷஷ்ட:
ப்ராகார: பஞ்சலோஹதாது மய: ॥

*அதனைத் தாண்டியதும் ஏழுயோஜனை தூரத்தில் பெருமை மிக்க ஐந்து உலோஹங்களாலான ஆறுவது கோட்டை. அது மங்களம் செய்யட்டும். (இரும்பு, வெண்கலம், தாம்ரம், ஈயம், பித்தளை என்ற ஐந்தும் கலந்தது பஞ்சலோஹம்.) (19)*

अनयोर्मध्ये सन्ततं अंकूरद् दिव्यकुसुमगन्धायाम्।
मन्दारवाटिकायां मानसमंगीकरोतु मे विहृतिम्॥

அநயோர் மத்த்யே ஸந்ததம்
அங்கூரத் திவ்ய குஸுமகந்த்தாயாம் ।
மந்தாரவாடிகாயாம்
மாநஸமங்கீகரோது மே விஹ்ருதிம் ॥

*பித்தளை - பஞ்சலோஹக்கோட்டைகளிடையே மந்தார மரப்பூங்கா தெய்விக மணத்தை வெளிப்படுத்துகிறது. அதில் என் மனம் கேளிக்கையை ஏற்கட்டும். (மந்தாரம் - கற்பகமரம்) (20)*

तस्यां इषोर्जलक्ष्मीतरुणीभ्यां शरदृतुः सहितः।
अभ्यर्चयन् स जीयाद् अंबां आमोद मेदुरैः कुसुमैः॥

தஸ்யாம் இஷோர்ஜலக்ஷ்மீ
தருணீப்ப்யாம் சரத்ருது: ஸதா ஸஹித: ।
அப்ப்யர்சயந் ஸ ஜீயாத்
அம்பாம் ஆமோதமேதுரை: குஸுமை:॥

*அதில் இஷஸ்ரீ ஊர்ஜஸ்ரீ என்ற யுவதிகளுடன் எப்போதும் இணைந்த சரத் ருது அம்பிகையை மணம் நிரம்பிய பூக்களால் பூஜிக்கிறார். அவர் விளங்கட்டும். (இஷ ஸ்ரீயும் ஊர்ஜஸ்ரீயும் ஐப்பசி - கார்த்திகை மாத தேவதைகள்). (21)*

तस्यर्षिसंख्ययोजन दूरे देदीप्यमान शृङ्गौघः।
कलधौतकलितमूर्तिः कल्याणं दिशतु सप्तमः सालः॥

தஸ்யர்ஷிஸங்க்க்யயோஜந
 தூரே தேதீப்யமாநச்ருங்கௌக: ।
கலதௌத கலிதமூர்த்தி:
 கல்யாணம் திசது ஸப்தம: ஸால: ॥

*பஞ்சலோஹக்கோட்டையிலிருந்து ஏழு யோஜனை தூரத்தில் வெள்ளியால் உருவாக்கப்பெற்ற ஏழாவது கோட்டை, ஒளி மிக்க சிகரங்களுடன் உள்ளது. அது மங்களம் வழங்கட்டும். (22)*

मध्ये तयोर्मरुत्पथलंघितविटपाग्रविरुतकलकण्ठा।
श्री पारिजातवाटी श्रियमनिशं दिशतु शीतलोद्देशा॥

மத்த்யே தயோர் மருத்பத
 லங்க்கிதவிடபாக்ரவிருத கலகண்ட்டா ।
ஸ்ரீபாரிஜாதவாடீ
 ச்ரியமநிசம் திசது சீதலோத்தேசா ॥

*பஞ்சலோஹ-வெள்ளிக் கோட்டைகளுக்கிடையே காற்று உலவும் வான வெளியைத் தாண்டிய மரங்களின் நுனிகளில் அமர்ந்த குயில்கள் கூவுகிற சீர்மிக்க பாரிஜாதத்தோட்டம் குளிர்ந்த தரையுள்ளதாக எப்போதும் சீரை வழங்கட்டும். (23)*

तस्यामतिप्रियाभ्यां सह खेलन् सह-सहस्यलक्ष्मीभ्याम्।
सामन्तो झषकेतोः हेमन्तो भवतु हेमवृद्ध्यै नः॥

தஸ்யாம் அதிப்ரியாப்ப்யாம்
 ஸஹகேலன் ஸஹஸஹஸ்ய லக்ஷ்மீப்ப்யாம் ।
ஸாமந்தோ ஜஷகேதோ:
 ஹேமந்தோ பவது ஹேமவ்ருத்தயை ந: ॥

*அதில் மிகவும் அன்புக்குரிய ஸஹஸ்ரீ, ஸஹஸ்ய ஸ்ரீ என்ற தேவியருடன் கேளிபுரிகிற மன்மதனின் பாதுகாப்பாளரான ஹேமந்தருது நமக்கு தங்கச் செழிப்பிற்கு உதவட்டும். (ஸஹஸ்ரீ ஸஹஸ்யஸ்ரீ மார்கழி தை மாதத்து தேவிகள்.) (24)*

उत्तरतस्तस्य महान् उद्भटहुतभुक्शिखारुणमयूखः ।
तपनीयखण्डरचितः तनुतादायुष्यमष्टमो वरणः ॥ २५ ॥

உத்தரதஸ்தஸ்ய மஹான்
உத்பட ஹுதபுக் சிகாருண மயூக: ।
தபநீயக்கண்ட ரசித:
தநுதாதாயுஷ்யமஷ்டமோ வரண: ॥

*அதன் மேல் பெருந்தீயின் நாக்கு போன்ற செவ்வொளி கொண்ட தங்கத்தாலான எட்டாவது பெரிய கோட்டையுள்ளது. அது ஆயுளை வளர்க்கட்டும். (25)*

कादम्बविपिनवाटीं अनयोर्मध्यभुवि कल्पितावासाम् ।
कलयामि सूनकोरककन्दलितामोदतुन्दिलसमीराम् ॥

காதம்பவிபினவாடீம்
அநயோர் மத்த்யபுவி கல்பிதாவாஸாம் ।
கலயாமி ஸூநகோரக
கந்தளிதாமோத துந்தில ஸமீராம் ॥

*வெள்ளி-தங்கக் கோட்டைகளிடையே, இருக்கை கொண்ட கடம்புத் தோட்டம் பூக்களும் மொட்டுகளும் வெளியிடுகிற கனத்தமணம் நிரம்பிய காற்றுடன் உள்ளது. அதனைத் தியானம் செய்கிறேன். (26)*

तस्यां अतिशिशिराकृतिरासीनस्तपतपस्यलक्ष्मीभ्याम् ।
शिवमनिशं कुरुतान्मे शिशिरर्तुः सततशीतलदिगन्तः ॥

தஸ்யாம் அதிசிசிராக்ருதி
ராஸீனஸ் தபதபஸ்ய லக்ஷ்மீப்யாம் ।
சிவமநிசம் குருதான் மே
சிசிரர்து: ஸதத சீதள திகந்த: ॥

*அதில் சில்லிப்பு மிக்க வடிவுள்ள சிசிரருது திக்கெட்டையும் எப்போதும் குளிர்ந்ததாக்கிக் கொண்டு, தபஸ்ரீ, தபஸ்ய ஸ்ரீ என்ற தேவியருடன் அமர்ந்துள்ளார். அவர் எப்போதும் எனக்கு மங்களம் புரியட்டும். (27)*

तस्यां कदम्बवाट्यां तत्प्रसवामोदमिलितमधुगन्धम्।
सप्तावरण मनोज्ञं शरणं समुपैमि मन्त्रिणीशरणम्॥

தஸ்யாம் கதம்பவாட்யாம்
தத்ப்ரஸவாமோத மிலித மது கந்த்தம் ।
ஸப்தாவரண மநோஜ்ஞும்
சரணம் ஸமுபைமி மந்த்ரிணீ சரணம் ॥

*அந்த கடம்புத் தோட்டத்தில் அதன் பூ மணம் கலந்த மகரந்த மணம் நிரம்பியதும் ஏழுகோட்டைகளால் மன நிறைவடையச் செய்வதுமான மந்திரிணீ தேவியின் மாளிகையை புகலிடமாக்கிக் கொள்கிறேன். (28)*

तत्रालये विशाले तपनीयारचित तरल सोपाने।
माणिक्य मण्डपान्तर्महिते सिंहासने मणीखचिते॥

தத்ராலயே விசாலே
தபநீயாரசித தரளஸோபாநே ।
மாணிக்ய மண்டபாந்தர்
மஹிதே ஸிம்ஹாஸநே மணீகசிதே ॥

*அந்த விசாலமான மாளிகையில் மாணிக்யரத்தினத்தாலான மண்டபத்தினுள் தங்கத்தாலான பளபளக்கிறபடிகளுள்ள ரத்தினத்தால் அமைந்த சீரிய ஸிம்ஹாஸனத்தின் மீது (மந்திரிணீ அமர்ந்துள்ளாள்.) (29)*

बिन्दु-त्रि-पञ्चकोण-द्विप-नृप-वसु-वेद दलकुरेखाढ्ये।
चक्रे सदा निविष्टां षष्टचष्टत्रिंशदक्षरेशानीम्॥

பிந்து-த்ரி-பஞ்சகோண-
த்விப-ந்ருப-வஸு-வேத தள- குரேகா ட்ட்யே ।
சக்ரே ஸதா நிவிஷ்டாம்
ஷஷ்ட்யஷ்டத்ரிம்சதக்ஷரேசாநீம் ॥

*பிந்து, த்ரிகோணம், பஞ்சகோணம், அஷ்டதளம், ஷோடச தளம், அஷ்டதளம், சதுர்தளம், பூபுரம் அமைந்த*

*சக்கிரத்தின் மீது எப்போதும் அமர்ந்தவள், அறுபதும் முப்பத்தெட்டுமான அக்ஷரங்களாலான மந்திரத்தின் ஈச்வரியவள். (30)*

तापिञ्छमेचकाभां तालीदलघटितकर्णताटङ्काम्।
तांबूलपूरितमुखीं ताम्राधरबिम्बदृष्टदरहासाम्॥

தாபிஞ்ச்சமேசகாபாம்
தாளீதளகடித கர்ணதாடங்காம் ।
தாம்பூல பூரிதமுகீம்
தாம்ராதரபிம்பத்ருஷ்டதரஹாஸாம் ॥

*மயில் தோகை போன்ற அழகிய மேனி நிறம் கொண்டவள். பனையோலையால் அமைந்த காதுகளுக்கான தாடங்கங்கள் உள்ளவள். வாய்நிறைய தாம்பூலம் கொண்டவள். சிவந்த கோவைப்பழம் போன்ற உதடுகளிடையே காணப்படுகிற புன் சிரிப்பு உள்ளவள். (31)*

कुङ्कुमपङ्किलदेहां कुवलयजीवातु-शावकवतंसाम्।
कोकनदशोणचरणां कोकिलनिक्वाणकोमलालापाम्॥

குங்கும பங்கிலதேஹாம்
குவலய ஜீவாது-சாவக-வதம்ஸாம் ।
கோகநத-சோணசரணாம்
கோகில நிக்வாண கோமலா லாபாம் ॥

*உடல் முழுவதும் குங்குமப்பூவின் குழம்பு பூசியவள், அல்லியை வாழவைக்கிற இளஞ்சந்திரனைத் தலையில் சூடியவள், செந்தாமரை போன்று சிவந்த திருவடிகள் உள்ளவள். குயிலின் கூவல் போன்று இனிய பேச்சுள்ளவள். (32)*

वामाङ्गगलितचूलीं वनमाल्यकदम्बमालिकाभरणाम्।
मुक्ता ललन्तिकाञ्चित मुग्धालिकमिलितचित्र कोदाराम्॥

வாமாங்க கலிதசூலீம்
வநமால்ய கதம்பமாலிகாபரணாம் ।
முக்தாலலந்திகாஞ்சித
முக்த்தாலிக-மிலித-சித்ரகோதாராம் ॥

*இடது மார்பில் கேசக் கொண்டை சரிந்துள்ளவள். வனமாலையும் கதம்பமாலையும் அணிந்துள்ளவள். முத்தாலான நெற்றிச் சுட்டி அணிந்து கூந்தல் சுருளாலழகிய திலகமிட்ட நெற்றியுள்ளவள். (33)*

करविधृतकीरशावक - कलनिनदव्यक्त
निखिलनिगमार्थाम्।
वामकुचसङ्गिवीणावादन सौख्यार्धमीलिताक्षियुगाम्॥

கரவித்ருத கீரசாபக
கல நிநத வ்யக்த நிகில நிகமார்த்தாம் ।
வாமகுசஸங்கி வீணாவாதன
ஸௌக்க்யார்த்த மீலிதாக்ஷியுகாம் ॥

*கையில் தாங்கியுள்ள கிளிக்குஞ்சின் இனிய மொழியால் எல்லா வேத சாஸ்திரப் பொருளையும் விளக்குபவள், இடது மார்பகத்தை ஒட்டிய வீணையின் வாசிப்பின் இனிமையில் இரு கண்களும் பாதி மூடியவாறு உள்ளவள். (34)*

आपाटलांशुकधरां आदिरसोन्मेष वासितकटाक्षाम्।
आम्नाय सारगुलिकां आद्यां संगीतमातृकां वन्दे॥

ஆபாடலாம்சுகதராம்
ஆதிரஸோன்மேஷவாஸித கடாக்ஷாம் ।
ஆம்நாயஸாரகுளிகாம்
ஆத்யாம் ஸங்கீதமாத்ருகாம் வந்தே ॥

*வெண்சிவப்புநிற ஆடை உடுத்தியவள். சிருங்காரரஸத்தின் எழுச்சி மணக்கின்ற கடைக்கண் பார்வையுள்ளவள். வேதத்தின் ஸாரமான உபநிஷத்தின்*

*குளிகையானவள். எல்லாவற்றிற்கும் முன் உள்ளவள். ஸங்கீதத்தின் தாயான அந்த ஸங்கீத மாத்ருகா என்ற மந்திரிணியை வணங்குகிறேன். (35)*

तस्य च सुवर्णसालस्योत्तरतस्तरुणकुङ्कुमच्छायः ।
शमयतु मम सन्तापं सालो नवमः स पुष्परागमयः ॥

தஸ்ய ச ஸுவர்ண ஸாலஸ்யோத்தரதஸ்
தருண குங்குமச்சாய: ।
சமயது மம ஸந்தாபம்
ஸாலோ நவம: ஸ புஷ்பராகமய: ॥

*அந்த தங்கக் கோட்டையின் வடக்கே, புதிய குங்குமப்பூவின் நிறம் கொண்ட புஷ்பராகத்தாலான ஒன்பதாவது கோட்டை எனது உள்ளக் கொதிப்பைத் தணிக்கட்டும். (36)*

अनयोरन्तरवसुधाः प्रणुमः प्रत्यग्रपुष्परागमयीः ।
सिंहासनेश्वरीमनुचिन्तननिस्तन्द्र सिद्धनीरन्ध्राः ॥

அநயோரந்தரவஸுதா:
ப்ரணுமः ப்ரத்யக்ரபுஷ்பராகமயீ: ।
ஸிம்ஹாஸநேச்வரீ மனு
சிந்தன நிஸ்தந்த்ரஸித்த்த நீரந்த்ரா: ॥

*இந்த தங்க - புஷ்பராகக் கோட்டைகளுக்கிடையே, ஸிம்ஹாஸனேச்வரியான தேவியின் மந்திரத்தைத் தொடர்ந்து மனனம் செய்வதில் சோம்பலற்ற சித்தர்கள் இடைவெளியின்றி நிறைந்துள்ள புஷ்பராகத்தாலான பூமியை (தரையை) வணங்குகிறேன். (37)*

तत्सालोत्तरदेशे तरुणजपाकिरणधोरणीशोणः ।
प्रशमयतु पद्मरागप्राकारो मम पराभवं दशमः ॥

தத்ஸாலோத்தரதேசே
தருண ஜபா கிரண தோரணீசோண: ।
ப்ரசமயது பத்மராக
ப்ராகாரோ மம பராபவம் தசம: ॥

*அந்தக் கோட்டையின் மேல் பகுதியில் முற்றிய செம்பரத்தைப் பூவின் ஒளி வீச்சால் சிவந்த பத்தாவது பத்மராகத்தாலான கோட்டை எனக்கு நேர்கிற அவமதிப்பை அடக்கட்டும். (38)*

अन्तरभूकृतवासान् अनयोरपनीतचित्तवैमत्यान्।
चक्रेशीपदभक्तान् चारणवर्गानहर्निशं कलये ॥

அந்தரபூக்ருதவாஸான்
அநயோரபநீத சித்த வைமத்யான் ।
சக்ரேசீ பத பக்தான்
சாரணவர்கான் அஹர்நிசம் கலயே ॥

*புஷ்பராக-பத்மராகக் கோட்டைகளுக்கிடையே வசிக்கிற சக்ரேச்வரியான தேவியின் திருவடியைச் சார்ந்த சாரண வகுப்பினர் மக்களின் உள்ளத்தைக் கெடுப்பவற்றை அகற்றுபவர்கள். அவர்களை இரவும் பகலும் நினைக்கிறேன். (39)*

सारङ्ग वाह योजनदूरेऽसंघटित केतनस्तस्य।
गोमेदकेन रचितो गोपायतु मां समुन्नतः सालः ॥

ஸாரங்கவாஹ யோஜந
தூரேऽஸங்க்கடிதகேதநஸ்தஸ்ய ।
கோமேதகேந ரசிதோ
கோபாயது மாம் ஸமுன்னத: ஸால: ॥

*பத்மராகக்கோட்டையிலிருந்து ஏழு யோசனை தூரத்தில் ஒன்றோடொன்று மாளிகைகள் நெருங்கியிராத கோமேதகத்தாலான உயர்ந்த கோட்டை என்னைக் காக்கட்டும். (40)*

वप्रद्वयान्तरोर्व्यां वटुकैर्विविधैश्च योगिनीबृन्दैः।
सततं समर्चितायाः संकर्षिण्याः प्रणौमि चरणाब्जम् ॥४१

வப்ரத்வயாந்தரோர்வ்யாம்
வடுகைர் விவிதைச்ச யோகினீ ப்ருந்தை: ।

ஸததம் ஸமர்சிதாயா:

ஸங்கர்ஷிண்யா: ப்ரணௌமி சரணாப்ஜம் ॥

*பத்மராக-கோமேதகக் கோட்டைகளிடையே உள்ள இடத்தில் பல வடுகர்களும் யோகினிகளும் வழிபடுகின்ற ஸங்கர்ஷிணியின் திருவடித் தாமரைகளை வணங்குகிறேன். (41)*

तापसयोजनदूरे तस्य समुत्तुंगगोपुरोपेतः ।
वाञ्छापूर्त्यै भवताद् वज्रमणीनिकरनिर्मितो वप्रः ॥

தாபஸயோஜனதூரே தஸ்ய

ஸமுத்துங்ககோபுரோபேத: ।

வாஞ்ச்சாபூர்த்யை பவதாத்

வஜ்ரமணீ நிகரநிர்மிதோ வப்ர: ॥

*அந்தக் கோட்டைக்கு ஏழு யோஜனைக்கப்பால் உயரமிக்க கோபுரங்களுடன் கூடிய வைரக்கல்லாலான கோட்டை நம் விருப்பம் நிறைவுற உதவட்டும். (42)*

वरणद्वितयान्तरतो वासजुषो विहितमधुरसास्वादाः ।
रंभादिविबुधवेश्याः रचयन्तु महान्तमस्मदानन्दम् ॥

வரணத்விதயாந்தரதோ

வாஸஜுஷோ விஹிதமது ரஸாஸ்வாதா: ।

ரம்ப்பாதி விபுதவேச்யா:

ரசயந்து மஹாந்தமஸ்மதாநந்தம் ॥

*கோமேதக-வைரக்கோட்டைகளிடையே வசிக்கிற ரம்பை முதலிய தேவவேசிகள் மதுவைச் சுவைத்துப்பருகுபவர்கள். அவர்கள் நமக்குப் பேரானந்தத்தை விளைவிக்கட்டும். (ரம்பை, ஊர்வசீ, மேனகை, அலம்புஷா, மஞ்ஜுகோஷா, ஸுகேசீ, பூர்வசித்தி, க்ருதாசீ, க்ருதஸ்தலா, விச்வாசீ, புஞ்ஜிகஸ்தலா, திலோத்தமா என்று அப்ஸரஸுகள்.) (43)*

तत्र सदा प्रवहन्ती तटिनी वज्राभिधा चिरं जीयात्।
चटुलोर्मिजालनृत्यत्कलहंसी कुलकलकणितपुष्टा ॥

தத்ர ஸதா ப்ரவஹந்தீ
தடினீ வஜ்ராபிதா சிரம் ஜீயாத் ।
சடுலோர்மிஜாலந்ருத்யத்
கலஹம்ஸீகுலகல க்வணித புஷ்டா ॥

*அங்கே எப்போதும் பெருகி ஓடுகின்ற வஜ்ரா என்ற ஆறு, பெரும் அலைகள் வரிசையின் மீது ஆடுகின்ற அன்னப் பறவைகளின் இனிய கூவல் நிறைந்தது. அது விளங்கட்டும். (44)*

रोधसि तस्या रुचिरे वज्रेशी जयति वज्रभूषाढ्या।
वज्रप्रदानतोषित वज्रिमुख त्रिदशविनुत चारित्रा ॥

ரோதஸி தஸ்யா ருசிரே
வஜ்ரேசீ ஜயதி வஜ்ரபூஷாட்ட்யா ।
வஜ்ரப்ரதானதோஷித
வஜ்ரிமுக த்ரிதச விநுத சாரித்ரா ॥

*அந்த நதியின் அழகிய கரையில் வைரநகை பூண்ட வஜ்ரேச்வரீ தேவி, வஜ்ராயுதம் அளித்ததால் மகிழ்ந்த இந்திரன் முதலான தேவர்களால் புகழப்பெற்றவளாக விளங்குகிறாள். (45)*

तस्योदीच्यां हरिति स्तबकित सुषमावलीढवियदन्तः।
वैडूर्यरत्नरचितो वैमल्यं दिशतु चेतसो वरणः ॥

தஸ்யோதீச்யாம் ஹரிதி
ஸ்தபகித ஸுஷமாவலீடவியதந்த: ।
வைடூர்யரத்ன ரசிதோ
வைமல்யம் திசது சேதஸோ வரண: ॥

*அதன் வடதிசையில் உள்ள வானளாவி ஒளி பரப்புகிற வைடூரியத்தாலான கோட்டை உள்ளத்தூய்மை தரட்டும். (46)*

अधिमध्यमेतयोः पुनरम्बाचरणावलंबितस्वान्तान्।
कार्कोटकादिनागान् कलयामः किञ्च बलिमुखान्दनुजान्॥

அதிமத்த்யமேதயோ: புந
ரம்பா சரணாவலம்பிதஸ்வாந்தான் ।
கார்கோடகாதி நாகான்
கலயாம: கிஞ்ச பலிமுகான் தநுஜான் ॥

*வைர - வைடூர்யக் கோட்டைகளிடையே அம்பிகையின் திருவடிகளைப் பற்றிய உள்ளம் கொண்ட கார்கோடகன் முதலிய நாகர்களையும் பலி முதலிய அஸுரர்களையும் நினைவில் கொள்வோம். (47)*

गन्धवहसंख्ययोजनदूरे गगनोर्ध्वजाङ्घिकस्तस्य।
वासवमणिप्रणीतो वरणो वर्धयतु वैदुर्षीं विशदाम्॥

கந்த்தவஹ ஸங்க்க்யயோஜன
தூரே ககநோர்த்த்வ ஜாங்க்கிதஸ்தஸ்ய ।
வாஸவமணிப்ரணீதோ
வரணோ வர்த்தயது வைதுஷீம் விசதாம்॥

*இதிலிருந்து ஏழு யோசனை தூரத்தில் வானளாவி நிற்கிற இந்திர நீல மணியாலான கோட்டை தெளிந்த கல்வியறிவை வளர்க்கட்டும். (48)*

मध्यक्षोण्यामनयोः महेन्द्रनीलात्मिकानि च सरांसि।
शातोदरी सहायान् भूपालानपि पुनः पुनः प्रणुमः॥

மத்த்யக்ஷோண்யாம் அநயோ:
மஹேந்த்ரநீலாத்மகானி ச ஸராம்ஸி ।
சாதோதரீ ஸஹாயான்
பூபாலானபி புன: புன: ப்ரணும: ॥

*வைடூர்ய-நீலமணிக்கோட்டைகள் நடுவே, இந்திரக் கல்லாலான நீர் நிலைகளும் இளமனைவியருடன் கூடிய பேரரசர்களும் உள்ளனர். இவர்களை அடிக்கடி துதிப்போம். (49)*

आशुग योजनदूरे तस्योर्ध्वं कान्ति धवलितदिगन्तः ।
मुक्ताविरचितगात्रो मुहुरस्माकं मुदे भवतु वप्रः ॥

ஆசுகயோஜநதூரே
 தஸ்யோர்த்வம் காந்திதவலிததிகந்த: ।
முக்தாவிரசிதகாத்ரோ
 முஹுரஸ்மாகம் முதே பவது வப்ர: ॥

*அதிலிருந்து ஏழுயோஜனை தூரத்தில் முத்தாலான கோட்டை தன் ஒளியால் திக்கெட்டையும் ஒளிமயமாக்குவதாக உள்ளது. நமக்கு அது மகிழ்ச்சி தரட்டும். (50)*

आवृत्त्योरधिमध्यं पूर्वस्यां दिशि पुरन्दरः श्रीमान् ।
अभ्रमुविटाधिरूढो विभ्रममस्माकमनिशमातनुतात् ॥

ஆவ்ருத்யோ ரதிமத்த்யம்
 பூர்வஸ்யாம் திசி புரந்தர: ஸ்ரீமான் ।
அப்ப்ரமுவிடாதிரூடோ
 விப்ப்ரமமஸ்மாகமநிசமாதநுதாத் ॥

*இந்திர நீல - முத்துக்கோட்டைகளின் இடையே கிழக்கு திசையில் ஐராவதத்தின் மீதமர்ந்த சீர்மிக்க இந்திரன் நமக்கு மனக்களிப்பைத் தரட்டும். (அப்ப்ரமு என்ற பெண்யானை ஐராவதத்தின் மனைவி.) (51)*

तत्कोणे व्यजनस्रुक् तोमरपात्र स्रुवान्नशक्तिधरः ।
स्वाहास्वधासमेतः सुखयतु मां हव्यवाहनः सुचिरम् ॥

தத்கோணே வ்யஜநஸ்ருக்
 தோமரபாத்ர ஸ்ருவான்ன சக்திதர: ।
ஸ்வாஹா ஸ்வதாஸமேத:
 ஸுகயது மாம் ஹவ்யவாஹன: ஸுசிரம்॥

*அதன் தென் கிழக்கில் ஸ்வாஹா, ஸ்வதா என்ற இரு மனைவியருடன் கூடிய அக்னி, விசிறி, ஸ்ருக் ஸ்ருவம்*

*என்ற ஹோமக்கரண்டிகள், இரும்புத்தடி, நெய்க்கிண்ணம், அன்னம், வேல் இவற்றைக் கைகளில் ஏந்தியுள்ளார். அவர் வெகுகாலம் என்னை இன்புறச் செய்யட்டும். (52)*

दक्षिणदिगन्तराले दण्डधरो नीलनीरदच्छायः ।
त्रिपुरापदाब्जभक्तः तिरयतु मम निखिलमंहसां निकरम् ॥

தக்ஷிணதிகந்தராலே
தண்டதரோ நீல நீரதச்சாய: ।
த்ரிபுரா பதாப்ஜபக்தஸ்
திரயது மம நிகிலமம்ஹஸாம் நிகரம் ॥

*தெற்கில் தண்ட மேந்திய கருமேகம் போன்ற நிறம் கொண்டயமன் திரிபுராதேவியின் தாமரைத் திருவடிகளின் பக்தர். அவர் எனது எல்லா பாபக் கூட்டங்களையும் அழிக்கட்டும். (53)*

तस्यैव पश्चिमायां दिशि दलितेन्दीवरप्रभाश्यामः ।
खेटासि यष्टिधारी खेदानपनयतु यातुधानो मे ॥

தஸ்யைவ பஶ்சிமாயாம்
திசி தலிதேந்தீவரப்ரபாச்யாம: ।
கேடாஸி யஷ்டிதாரீ
கேதாநபநயது யாதுதாநோ மே ॥

*அதற்கு மேற்கே (தென் மேற்கில்) மலர்ந்த ஆம்பல் நிற ஒளியால் கருத்த நிர்ருதி கேடயம், கத்தி, தடி ஏந்தியவர். அவர் எனது துயரைப் போக்கட்டும். (54)*

तस्या उत्तरदेशे धवलाङ्गो विपुलझषवरारूढः ।
पाशायुधात्तपाणिः पाशी विदलयतु पाशजालानि ॥

தஸ்யா உத்தரதேசே
தவலாங்கோ விபுலஜஷவரா ரூட: ।
பாசாயுதாத்த பாணி:
பாசீ விதலயது பாசஜாலாநி ॥

*அதற்கு வடக்கே (மேற்கில்) தூய்மை மிக்க வெண்ணிற மேனியருைன வருணன் பெரும் மகரமீன் மீதமர்ந்தவர். பாசக்கயிற்றை ஆயுதமாக ஏந்தியவர், அவர் பாசவலைகளை அறுக்கட்டும். (55)*

वन्दे तदुत्तरहरित्कोणे वायुं चमूरुवरवाहम्।
कोरकिततत्त्वबोधान् गोरक्षप्रमुखयोगिनोऽपि मुहुः ॥

வந்தே ததுத்தரஹரித்
கோணே வாயும் சமூருவரவாஹம் ।
கோரகித தத்வபோதான்
கோரக்ஷப்ரமுகயோகிநோऽபி முஹு: ॥

*அதன் வடக்கில் (வடமேற்கில்) மானை வாகனமாகக் கொண்ட வாயுவையும், தத்வஜ்ஞானம் மொட்டிட்ட கோரக்கர் முதலிய யோகிகளையும் அடிக்கடி வணங்குகிறேன். (56)*

तरुणीरिडाप्रधानास्तिस्रो वातस्य तस्य कृतवासाः।
प्रत्यग्रकापिशायन पानपरिभ्रान्त लोचनाः कलये ॥

தருணீரிடாப்ரதாநா:
திஸ்ரோ வாதஸ்ய தஸ்ய க்ருத வாஸா: ।
ப்ரத்யக்ர காபிசாயந
பாநபரிப்ப்ராந்த லோசநா: கலயே ॥ 57 ॥

*புதிய மது அருந்தியதால் சுழல்கின்ற கண்களுள்ள இடை, பிங்கலை, ஸுஷும்னை என்ற அழகிய ஆடை உடுத்திய வாயுவின் மனைவியரை தியானிக்கிறேன். (57)*

तल्लोकपूर्वभागे धनदं ध्यायामि शेवधिकुलेशम्।
अपि माणिभद्रमुख्यान् अंबाचरणावलंबिनो यक्षान् ॥

தல்லோக பூர்வபாகே
தநதம் த்த்யாயாமிசேவதிகுலேசம் ।
அபி மாணிபத்ரமுக்க்யான்
அம்பாசரணாவலம்பிநோ யக்ஷான்॥

*வாயுலோகத்தின் கிழக்கே நிதிகளுக்கு ஈசனான குபேரனையும் அம்பிகையின் திருவடிகளைப் பற்றியுள்ள மாணிபத்ரன் முதலிய யக்ஷர்களையும் தியானம் செய்கிறேன். (58)*

तस्यैव पूर्वसीमनि तपनीयारचितगोपुरे नगरे।
कात्यायनीसहायं कलये शीतांशुखण्डचूडालम्॥

தஸ்யைவ பூர்வஸீமநி
 தபநீயா ரசித கோபுரே நகரே ।
காத்யாயனீஸஹாயம்
 கலயே சீதாம்சுக்கண்டசூடாலம் ॥

*அதன் கிழக்கெல்லையில் (வடகிழக்கில்) தங்கத்தாலான கோபுரங்களுள்ள நகரில் காத்யாயனீயுடனுள்ள சந்திரனின் துண்டைச்சூடிய ஈசானனைத் தியானிக்கிறேன். (59)*

तत्पुरषोडशवरणस्थलभाजस्तरुणचन्द्रचूडालान्।
रुद्राध्याये पठितान् रुद्राणी सहचरान् भजे रुद्रान्॥

தத்புர ஷோடசவரண
 ஸ்த்தலபாஜஸ் தருண சந்த்ர சூடாலான் ।
ருத்ராத்த்யாயே படிதான்
 ருத்ராணீஸஹசரான் பஜே ருத்ரான் ॥

*அங்கு பதினாறு கோட்டைகளிலுள்ள பிறைச்சந்திரனைச் சூடிய ருத்ராத்தியாயத்தில் கூறப்பட்ட ருத்ராணிகளுடன் கூடிய ருத்ரர்களை வழிபடுகிறேன். (60)*

पवमानसंख्ययोजनदूरे बालतृणमेचकस्तस्य।
सालो मरकतरचितः संपदमचलां श्रियं च पुष्णातु॥

பவமாநஸங்க்க்ய யோஜந
 தூரே பாலத்ருண மேசகஸ்தஸ்ய ।
ஸாலோ மரகத ரசித:
 ஸம்பதமசலாம் ச்ரியம் ச புஷ்ணாது ॥ 61 ॥

*இதற்குள் ஏழு யோசனை தூரத்தில் பசும்புல் நிறமுள்ள மரகத ரத்தினத்தாலான கோட்டை அகலாத செல்வச் செழிப்பையும் சீரையும் போஷிக்கட்டும். (61)*

आवृतियुग्मान्तरतो हरितमणीनिवहमेचके देशे ।
हाटकतालीविपिनं हालाघटघटितविटपं आकलये ।।

ஆவ்ருதியுக்மாந்தரதோ
ஹரித மணீ நிவஹமேசகே தேசே ।
ஹாடக தாலீவிபினம்
ஹாலாகடகடிதவிடபமாகலயே ॥

*முத்து-மரகதக் கோட்டைகளிடையே பச்சை ரத்தினக் குவியல் போன்று கறுத்த தேசத்தில் மதுக்குடங்கள் கிளைகளில் இணைக்கப்பட்டுள்ள தங்கத்தாலான பனைமரக்காட்டைத் தியானிக்கிறேன். (62)*

तत्रैव मन्त्रिणीगृह परिणाहं तरलकेतनं सदनम् ।
मरकतसौधमनोज्ञं दद्यादायूंषि दण्डनाथायाः ।।

தத்ரைவ மந்த்ரிணீக்ருஹ
பரிணாஹம் தரலகேதநம் ஸதனம் ।
மரகதஸௌதமநோஜ்ஞம்
தத்யாதாயூம்ஷி தண்ட நாதாயா: ॥

*அங்கேயே மந்திரிணீ தேவியின் மாளிகைபோல் பரப்புள்ளதும் கொடி ஆடிக்கொண்டிருப்பதுமான மரகதப்பச்சையாலான மேல் உப்பரிகையால் அழகிய தண்டநாதை என்ற வாராஹியின் மாளிகை ஆயுளை அளிக்கட்டும். (63)*

सदने तत्र हरिन्मणिसंघटिते मण्डपे शतस्तंभे ।
कार्तस्वरमयपीठे कनकमयांबुरुह कर्णिकामध्ये ।।

ஸதநே தத்ர ஹரின்மணி
ஸங்க்கடிதே மண்டபே சத ஸ்தம்ப்பே ।
கார்தஸ்வரமயபீடே
கநகமயாம்புருஹ கர்ணிகா மத்த்யே ॥

*அங்கு பச்சை ரத்னங்கள் இழைத்த நூற்றுக்கால் மண்டபத்தில் தங்கத்தாலான பீடத்தில் தங்கத்தாமரை மொட்டின்மீது (வாராஹீ தேவி அமர்ந்துள்ளாள்.) (64)*

बिन्दुत्रिकोण वर्तुल षडस्रवृत्तद्वयान्विते चक्रे।
सञ्चारिणी दशोत्तरशतार्णमनुराज कमलकलहंसी ॥

பிந்து த்ரிகோணவர்துல
ஷடஸ்ரவ்ருத்தத்வயான்விதே சக்ரே ।
ஸஞ்சாரிணீ தசோத்தர
சதார்ண மநுராஜ கமல கலஹம்ஸீ ॥

*பிந்து, திரிகோணம், வட்டம், ஷட்கோணம், இருவட்டங்கள் கொண்ட சக்கிரத்தில் 110 எழுத்துக்கள் கொண்ட சிறந்த மந்திரமாகிய தாமரையில் அன்னப்பறவையாக (வாராஹீ) ஸஞ்சரிப்பவள் அவள். (65)*

कोलवदना कुशेशयनयना कोकारिमण्डितशिखण्डा।
सन्तप्तकाञ्चनाभा सन्ध्यारुण चेलसंवृतनितम्बा॥

கோலவதநா குசேசய
நயநா கோகாரிமண்டித சிகண்டா ।
ஸந்தப்தகாஞ்சநாபா
ஸந்த்த்யாருண சேல ஸம்வ்ருத நிதம்பா ॥

*பன்றி முகம் கொண்டவள், தாமரை போன்ற கண்களுள்ளவள், சந்திரனை முடியில் சூடியவள், காய்ச்சிய தங்கம் போன்ற மேனி ஒளி கொண்டவள், சந்தியாகாலத்துச் செந்நிற ஆடையால் இடுப்பை மறைத்துக் கொண்டவள். (66)*

हलमुसलशंख चक्रांकुशपाशाभयवरस्फुरित हस्ता।
कूलंकषानुकंपा कुंकुमजंबालितस्तनाभोगा॥

ஹலமுஸல சங்க்க சக்ராங்குச
பாசாபயவரஸ்ப்புரித ஹஸ்தா ।

கூலங்கஷானுகம்பா
குங்கும ஜம்பாலிதஸ்தநாபோகா ॥

*கலப்பை, உலக்கை, சங்கு, சக்கிரம், துரட்டி, பாசம், அபயம், வரம் துலங்கும் கைகளுள்ளவள், கரை கடந்த பரிவுள்ளவள், மார்பகத்தில் குங்குமப்பூக்குழம்பு பூசியவள். (67)*

धूर्तानामति दूरा वार्ताशेषावलग्न कमनीया।
आर्तालि शुभदात्री वार्ताली भवतु वाञ्छितार्थाय॥

தூர்தாநாம் அதிதூரா
வார்தாசேஷாவலக்ந கமநீயா ।
ஆர்தாளீ சுபதாத்ரீ
வார்தாளீ பவது வாஞ்ச்சிதார்த்தாய ॥

*துஷ்டர்களுக்கு மிகவும் தூரத்திலுள்ளவள், சொல்லால் உணரத் தக்க மெல்லிடையால் அழகி, துயருற்றவர்களுக்கு நலம்புரிபவள், வார்த்தாளீ என்ற அந்த வாராஹீ விரும்பியதைப் பெற அருளட்டும். (68)*

तस्याः परितो देवीः स्वप्नेश्युन्मत्तभैरवीमुख्याः।
प्रणमत जंभिन्याद्याः भैरववर्गांश्च हेतुकप्रमुखान्॥

தஸ்யா: பரிதோ தேவீ:
ஸ்வப்நேச்யுன்மத்தபைரவீ முக்க்யா: ।
ப்ரணமத ஜம்ப்பின்யாத்யா:
பைரவவர்காம்ச்ச ஹேதுகப்ரமுகான் ॥

*வாராஹியைச் சுற்றிச் சூழ்ந்துள்ள ஸ்வப்நேச்வரி, உன்மத்தபைரவி முதலியவர்களையும் ஜம்ப்பினி முதலியவர்களையும் ஹேதுகர் முதலான பைரவ கணங்களையும் வணங்குவீர். (ஜம்ப்பினீ, மோஹினீ, ஸ்தம்ப்பினீ, அந்த்திநீ, ருந்த்தினீ என ஐந்து யோகினிகள். ஹேதுகர், த்ரிபுராந்தகர், வேதாளர், அக்னி ஜிஹ்வர், காலாந்தகர், கபாலர், ஏகபாதர், பீமரூபர், மலயர், ஹாடகேச்வரர் என பத்து பைரவர்கள். (69)*

पूर्वोक्तसंख्ययोजनदूरे पूयां(षां) शुपाटलस्तस्य।
विद्रावयतु मदार्तिं विद्रुमसालो विशङ्कटद्वारः ॥

பூர்வோக்தஸங்க்க்ய யோஜன
தூரே பூயா(ஷா)ம்சு பாடலஸ்தஸ்ய ।
வித்ராவயது மதார்திம்
வித்ருமஸாலோ விசங்கடத்வார: ॥

*மரகதக் கோட்டையிலிருந்து ஏழுயோசனை தூரத்தில் ஸூர்ய ஒளியால் சிவந்ததும் திடமான வாயிலுடன் கூடியதுமான பவழக்கோட்டை என் துயரை விரட்டட்டும். (70)*

आवरणयोरह र्निशमन्तरभूमौ प्रकाशशालिन्याम्।
आसीनमंबुजासनमभिनव सिन्दूरगौरमहमीडे॥

ஆவரணயோ ரஹர் நிச
மந்தரபூமௌ ப்ரகாச சாலின்யாம் ।
ஆஸீனமம்புஜாஸநம்
அபிநவஸிந்தூர கௌரமஹ மீடே ॥

*மரகத - பவழக் கோட்டைகளுக்கிடையே இரவும் பகலும் ஒளிமிக்க இடத்தில் புதிய ஸிந்தூரத்தின் வெண் சிவப்பு நிறமுள்ளவராக அமர்ந்துள்ள பிரும்மாவை துதிக்கிறேன். (71)*

वरणस्य तस्य मारुतयोजनतो विपुलगोपुरद्वारः।
सालो नानारत्नैः संघटिताङ्गः कृषीष्ट मदभीष्टम्॥

வரணஸ்ய தஸ்ய மாருத
யோஜநதோ விபுல கோபுரத்வார: ।
ஸாலோ நாநாரத்னை:
ஸங்க்கடிதாங்க: க்ருஷீஷ்ட மதபீஷ்டம் ॥

*பவழக் கோட்டைக்கு ஏழு யோஜனை தாண்டி அகன்ற கோபுர வாயில் உள்ள பல ரத்தினங்களால்*

*உருவான நவ ரத்னக் கோட்டை என் விருப்பத்தை உருவாக்கட்டும். (72)*

अन्तरकक्ष्यामनयोरविरलशोभापिचण्डिलोद्देशाम्।
माणिक्यमण्डपाख्यां महतीमधिहृदयमनिशमाकलये ।।

அந்தர கக்ஷ்யா மநயோ
ரவிரல சோபா பிசண்டிலோத்தேசாம் ।
மாணிக்ய மண்டபாக்யாம் மஹதீம்
அதிஹ்ருதயம் அநிசம் ஆசாஸே ॥

*பவழ-நவரத்தினக்கோட்டைகளுக்கிடையே இடைவெளியின்றி எல்லாவிடங்களிலும் ஒளி நிறைந்ததும் பெரிதுமான மாணிக்கமண்டபத்தை மனத்தில் எப்போதும் நினைத்துக் கொள்கிறேன். (73)*

तत्र स्थितं प्रसन्नं तरुणतमालप्रवालकिरणाभम्।
कर्णावलंबि कुण्डलकन्दलिताभीशुकवचितकपोलम्।।

தத்ர ஸ்த்திதம் ப்ரஸன்னம்
தருண தமாலப்ரவாள கிரணாபம் ।
கர்ணாவலம்பி குண்டல
கந்தலிதாபீசு கவசித கபோலம் ॥

*அங்கு தெளிவாகக் காட்சிதருபவரும் இளம்பச்சிலைத் துளிரின் நிறம் கொண்டவரும் காதுகளில் தொங்குகிற குண்டலங்களின் குவிந்த ஒளியால் கன்னங்கள் மறைக்கப்பட்டவருமான (முகுந்தரைப் பிடித்துக் கொள்கிறேன்.) (74)*

शोणाधरं शुचिस्मितं एणाङ्कवदनं एधमानकृपम्।
मुग्धैणमदविशेषकमुद्रितनिटिलेन्दु रेखिकारुचिरम्।।

சோணாதரம் சுசிஸ்மிதம்
ஏணாங்கவதநம் ஏதமாநக்ருபம் ।
முக்த்தைண மத விசேஷக
முத்ரித நிடிலேந்து ரேகிகா ருசிரம் ॥

*அவர், சிவந்த உதடுள்ளவர், தூயபுன் சிரிப்புள்ளவர், சந்திரனைப் போன்ற முகமுள்ளவர், பெருகுகிற கிருபையுள்ளவர், பேதையான மானின் கஸ்தூரிப் பொட்டிட்ட நெற்றியில் சந்திரனின் கீற்றுல் அழகர். (75)*

नालीक दल सहोदर नयनाञ्चल घटितमनसिजाकूतम् ।
कमला कठिन पयोधरकस्तूरी घुसृण पङ्किलोरस्कम् ।।

நாளீக தல ஸஹோதர
நயனாஞ்சலகடித மநஸிஜாகூதம் ।
கமலா கடினபயோதர
கஸ்தூரீ குஸ்ருண பங்கிலோ ரஸ்கம் ॥

*தாமரை இதழிற்கு இணையான கண்களின் ஓரப்பார்வையில் காமத்தை வெளிப்படுத்துபவர், லக்ஷ்மியின் இறுகிய மார்பகத்திலிருந்த கெட்டியான கஸ்தூரி-குங்குமப்பூ பூச்சு ஒட்டிக் கொண்ட மார்புள்ளவர். (76)*

चांपे यगन्धि कैश्यं शंपासब्रह्मचारि कौशेयम् ।
श्रीवत्स कौस्तुभधरं श्रितजनरक्षाधुरीणचरणाब्जम् ।।

சாம்பேய கந்த்தி கைச்யம்
சம்பாஸப்ரம்ஹசாரிகௌசேயம் ।
ஶ்ரீவத்ஸ கௌஸ்துபதரம்
ச்ரித ஜநரக்ஷாதுரீண சரணாப்ஜம் ॥

*சம்பகப்பூவின் மணமிக்க கூந்தல் முடிப்புள்ளவர், மின்னலையொத்த பட்டாடையுள்ளவர், ஶ்ரீவத்ஸமும் கௌஸ்துபமும் தரித்தவர், தன்னை அண்டிய மக்களைக்காப்பதில் முனைந்த திருவடியுள்ளவர். (77)*

कम्बुसुदर्शनविलसत्करपद्मं कण्ठलोलवनमालम् ।
मुचुकुन्दमोक्षफलदं मुकुन्दमानन्दकन्दमवलंबे ।।

கம்பு ஸுதர்சந விலஸத்
கரபத்மம் கண்ட்டலோல வநமாலம் ।

முசுகுந்த மோக்ஷபலதம்
முகுந்த மாநந்தகந்தமவலம்பே ॥

*சங்கும் ஸுதர்சன சக்கிரமும் ஏந்திய அழகான தாமரை போன்றகைகள் உள்ளவர், கழுத்தில் வனமாலை அணிந்தவர், முசுகுந்தருக்கு முக்தியின் பயனைத் தந்தவர். ஆனந்தக் கிழங்காக உள்ள அந்த முகுந்தரை அண்டி நிற்கிறேன். (78)*

तद्वरणोत्तरभागे तारापति बिम्ब चुंबि निजशृङ्गः ।
विविधमणिगणघटितो वितरतु सालो विनिर्मलां
धिषणाम् ॥

தத்வரணோத்தரபாகே
தாராபதிபிம்ப சும்பி நிஜச்ருங்க: ।
விவிதமணிகணகடிதோ
விதரது ஸாலோ விநிர்மலாம் திஷணாம் ॥

*நவரத்னக் கோட்டைக்கு வடக்கில் சந்திரனைத் தொடுமளவு உயர்ந்த சிகரமுள்ள பலரத்ன வரிசைகளால் அமைந்த கோட்டை தூய அறிவை வழங்கட்டும். (79)*

प्राकारद्वितयान्तरकक्ष्यां पृथुरत्न निकरसंकीर्णाम् ।
नमत सहस्रस्तंभक मण्डपनाम्नाऽति विश्रुतां भुवने ॥

ப்ராகாரத்விதயாந்தரகக்ஷ்யாம்
ப்ருது ரத்னநிகரஸங்கீர்ணாம் ।
நமத ஸஹஸ்ரஸ்தம்பக
மண்டபநாம்நாऽதி விச்ருதாம் புவநே ॥

*நவரத்ன-நாநாரத்னக் கோட்டைகளுக்கிடையே அமைந்த பெரிய ரத்ன வரிசைகள் பதித்த புகழ்பெற்ற ஆயிரக்கால் மண்டபத்தை வணங்குவீர். (80)*

प्रणुमस्तत्र भवानीसहचरमीशानं इन्दुखण्डधरम् ।
शृङ्गारनायिकामनुशीलन भाजोऽपि भृङ्गिनन्दिमुखान् ॥

ப்ரணுமஸ் தத்ர பவாநீ
ஸஹசரமீசாநம் இந்து கண்ட தரம் ।
ச்ருங்காரநாயிகாமனு
சீலநபாஜோऽபி ப்ருங்கி நந்தி முகான் ॥

*அங்கு பவானியுடனுள்ள சந்திரகலை தரித்த ஈச்வரனையும் ச்ருங்கார நாயகியான அம்பிகையின் மந்திரத்தை ஜபிப்பதில் ஈடுபட்ட பிருங்கி நந்தி முதலானோரையும் வணங்குவோம். (81)*

**तस्यैणवाह योजनदूरे वन्दे मनोमयं वप्रम्।**
**अंकूरन्मणि किरणां अन्तरकक्ष्यां च निर्मलामनयोः ।।**

தஸ்யைணவாஹந யோஜந
தூரே வந்தே மனோமயம் வப்ரம் ।
அங்கூரன் மணி கிரணாம்
அந்தரகக்ஷ்யாம் ச நிர்மலாமநயோ: ॥

*இதற்கு ஏழுயோஜனை வடக்கில் மனோமயக்கோட்டையையும் அதனை ஒட்டி ரத்தின ஒளிக் கதிர் பரவிய தூய இடைவெளிப்பூமியையும் வணங்குகிறேன். (82)*

**तत्रैवामृतवापीं तरल तरङ्गावलीढ तटयुग्माम्।**
**मुक्तामयकलहंसी मुद्रित कनकारविन्द सन्दोहाम्।।**

தத்ரைவாம்ருதவாபீம்
தரளதரங்காவலீடதடயுக்மாம் ।
முக்தாமய கலஹம்ஸீ
முத்ரித கநகாரவிந்த ஸந்தோஹாம் ॥

*அங்கேயே, அலைமோதுகின்ற இருகரைகள் உள்ள அம்ருத வாபியைத்தியானிக்கிறேன். அது முத்து போன்ற அன்னப்பறவைகளால் சூழப்பெற்ற தங்கத் தாமரைக் குவியலுள்ளது. (83)*

शक्रोपलमयभृङ्गीसङ्गीतोन्मेष घोषितदिगन्ताम्।
काञ्चनमयाङ्ग विलसत्कारण्डवषण्ड ताण्डवमनोज्ञाम्॥

சக்ரோபலமயப்ப்ருங்கீ
ஸங்கீதோன்மேஷ கோஷித திகந்தாம் ।
காஞ்சந மயாங்க விலஸத்
காரண்டவ ஷண்ட தாண்டவ
மநோஜ்ஞாம் ॥

*இந்திர நீலமயமான வண்டுகளின் ரீங்கார ஒலியாகிற பாட்டு திக்கெட்டும் பரவியுள்ளது. தங்க நிற உடல் கொண்ட நீர்க்கோழிக் கூட்டங்களின் ஆட்டங்களால் அழகியது. (84)*

कुरुविन्दात्मकहल्लककोरकसुषमासमूह पाटलिताम्।
कलये सुधास्वरूपां कन्दलितामन्द कैरवामोदाम्॥ ८५॥

குருவிந்தாத்மக ஹல்லக
கோரக ஸுஷமா ஸமூஹ பாடலிதாம் ।
கலயே ஸுதாஸ்வரூபாம்
கந்தளிதாமந்த கைரவா மோதாம் ॥

*மாணிக்க ரத்தினமயமான செங்கழுநீர்ப் பூ மொட்டின் அழகுக்குவியலால் சிவந்த அந்த அமிருத வாபி, மலர்ந்த ஆம்பல் பூக்களின் மணமிக்கதாக உள்ளது. அமுத நீர்வடிவிலுள்ள அந்த அமிருதவாபியைத் தியானம் செய்கிறேன். (85)*

तद्वापिकान्तराले तरले मणिपोतसीम्नि विहरन्तीम्।
सिन्दूरपाटलाङ्गीं सितकिरणांकूर कल्पितवतंसाम्॥ ८६

தத்வாபிகாந்தராளே தரளே
மணிபோதஸீம்நி விஹரந்தீம் ।
ஸிந்தூரபாடலாங்கீம்
ஸிதகிரணாங்கூர கல்பிதவதம்ஸாம் ॥

*அந்த வாபியின் நடுவே ரத்ன ஓடத்தின் ஓரத்தில் அமர்ந்து விளையாடுகிற தாராதேவி சிந்தூரம்போல் சிவந்தமேனியுள்ளவள். சந்திர கலையை முடியில் சூடியுள்ளவள். (86)*

पर्वेन्दुबिम्बवदनां पल्लवशोणाधरस्फुरित हासाम्।
कुटिलकबरीं कुरङ्गीशिशुनयनां कुण्डलस्फुरित गण्डाम्॥

பர்வேந்துபிம்பவதநாம்
பல்லவ சோணாதர ஸ்ப்புரித ஹாஸாம் ।
குடில கபரீம் குரங்கீ
சிசுநயநாம் குண்டலஸ்ப்புரித கண்டாம் ॥

*அவள் பூர்ண சந்திர பிம்பம் போன்ற முகமுள்ளவள், இளந்துளிர்போன்று சிவந்த உதடுகளில் வெடிக்கின்ற புன் சிரிப்புள்ளவள். சுருண்ட கேசங்களுள்ளவள். மான் குட்டிபோன்று கண்கள் உள்ளவள். குண்டல ரத்ன ஒளி கன்னங்களில் பாய்ந்திருப்பவள். (87)*

निकटस्थपोतनिलयाः शक्तीः शयविधृतहेमशृङ्ग जलैः ।
परिषिञ्चन्तीं परितस्तारां तारुण्यगर्वितां वन्दे॥

நிகடஸ்த்த போத நிலயா:
சக்தீ: சயவித்த்ருத ஹேமச்ருங்கஜலை:।
பரிஷிஞ்சந்தீம் பரிதஸ்தாராம்
தாருண்யகர்விதாம் வந்தே ॥

*அருகிலுள்ள ஓடத்திலுள்ள சக்திகளின் மீது கையில் ஏந்திய பசுவின் கொம்பால் நீர்மொண்டு இறைப்பவள். யௌவனத்தால் மதர்த்த அந்த தாரா தேவியை வணங்குகிறேன். (88)*

प्रागुक्तसंख्ययोजनदूरे प्रणमामि बुद्धिमयसालम्।
अनयोरन्तरकक्ष्यामष्टापदपुष्टमेदिनीं रुचिराम्॥

ப்ராகுக்த ஸங்க்ய யோஜன
தூரே ப்ரணமாமி புத்த்திமயஸாலம் ।

அநயோரந்தர கக்ஷ்யாம்
அஷ்டாபத புஷ்டமேதிநீம் ருசிராம் ॥

*இதனையடுத்து அதே ஏழு யோஜனை தூரத்திலுள்ள புத்தி மயக்கோட்டையும் மனோமய - புத்திமயக் கோட்டைகளினிடையே உள்ள தங்கம் நிறைந்த அழகிய பூமியையும் வணங்குகிறேன். (89)*

कादंबरीनिधानां कलयाम्यानन्दवापिकां तस्याम्।
शोणाश्मनिवहनिर्मित सोपानश्रेणि शोभमानतटीम्॥

காதம்பரீ நிதானாம்
கலயாம்யாநந்த வாபிகாம் தஸ்யாம் ।
சோணாச்ம நிவஹ நிர்மித
ஸோபாநச்ரேணி சோபமானதடீம் ॥

*அங்கு சிவப்புரத்தினக் கற்கள் குவியலாலான படிக்கட்டுகளுள்ள அழகிய கரைகளுள்ளதும் மதுவே நீராகப் பெருகுவதுமான ஆனந்த வாபியைத் தியானிக்கிறேன். (90)*

माणिक्यतरणिनिलयां मध्ये तस्या मदारुणकपोलाम्।
अमृतेशीत्यभिधानां अन्तः कलयामि वारुणीं देवीम्॥

மாணிக்யதரணி நிலயாம்
மத்த்யே தஸ்யா மதாருண கபோலாம் ।
அம்ருதேசீத்யபிதானாம்
அந்த: கலயாமி வாருணீம் தேவீம் ॥

*அந்த வாபியின் நடுவில் மாணிக்கத்தாலான ஓடத்தில் அமர்ந்தவளும் மதத்தால் சிவந்த கன்ன முள்ளவளும் அமிருதேசீ என்ற பெயருள்ளவளுமான வாருணீதேவியை உள்ளத்தில் உருவகப்படுத்துகிறேன். (91)*

सौवर्णिकेनिपातनहस्ताः सौन्दर्यगर्विता देव्यः।
तत्पुरतः स्थितिभाजो वितरन्त्वस्माकं आयुषां वृद्धिम्॥

ஸௌவர்ணகேநிபாதநஹஸ்தா:
ஸௌந்தர்யகர்விதா தேவ்ய: ।
தத்புரத: ஸ்த்திதிபாஜோ
விதரந்த்வஸ்மாகம் ஆயுஷோ வ்ருத்திம் ॥

*தங்கத்துடுப்புகளைக் கையிலேந்தி அழகான செருக்குற்ற தேவிகள் அம்ருதேசி தேவியின் முன் அமர்ந்திருக்கின்றனர். அவர்கள் நம் ஆயுள் விருத்தியைச் செய்யட்டும். (92)*

तस्य पृषदश्व योजन दूरेऽहङ्कारसालमतितुङ्गम्।
वन्दे तयोश्च मध्ये कक्ष्यां वलमानमलयपवमानाम्॥

தஸ்ய ப்ருஷதச்வ யோஜந
தூரேऽஹங்காரஸாலமதி துங்கம் ।
வந்தே தயோச்ச மத்த்யே
கக்ஷ்யாம் வலமாநமலய பவமாநாம் ॥

*அதற்கு ஏழு யோஜனை தூரத்தில் உள்ள மிகவும் உயரமுள்ள அஹங்காரக் கோட்டையையும் புத்திமய - அஹங்காரக் கோட்டைகளிடையே உள்ள தென்றல் வீசுகிற இடத்தையும் வணங்குகிறேன். (93)*

विनुमो विमर्शवापीं सौषुम्नसुधास्वरूपिणीं तत्र।
वेलातिलंघ्य वीचीकोलाहल भरित कूलवनवाटीम्॥

விநுமோ விமர்சவாபீம்
ஸௌஷும்ந ஸுதாஸ்வரூபிணீம் தத்ர ।
வேலாதிலங்க்க்ய வீசீ
கோலாஹல பரித கூலவநவாடீம் ॥

*அங்கு கரையைத் தாண்டுகிற அலைகளின் வீச்சால் கரைக்கருகே உள்ள காடுகளை நீர் நிரம்பியதாக்குகிறதும் ஸுஷும்நா வழியே பிரும்மரந்திரத்திலிருந்து பெருகுகிறதுமான அமுத நீரானான விமர்சவாபியை வணங்குவோம். (94)*

तत्रैव सलिलमध्ये तापिञ्छदलप्रपञ्च सुषमाभाम्।
श्यामलकञ्चुकलसितां श्यामाविटबिम्बडंबरहरास्याम्॥

தத்ரைவ ஸலிலமத்த்யே
தாபிஞ்ச்ச தளப்ரபஞ்சஸுஷமாபாம் ।
ச்யாமள கஞ்சுகலஸிதாம்
ச்யாமா விடபிம்படம்பர ஹராஸ்யாம் ॥

*விமர்சவாபியின் நீர்நடுவே பச்சிலை இலைக்கொத்தின் நிற அழகுள்ள குருகுல்லா தேவி உள்ளாள். கருப்புரவிக்கை அணிந்தவள். சந்திரபிம்பத்தின் செருக்கை அடக்கக் கூடிய முகமுள்ளவள். (95)*

आभुग्नमसृणचिल्लीहसितायुग्मशरकार्मुकविलासाम्।
मन्दस्मिताञ्चितमुखीं मणिमयताटङ्क मण्डित कपोलाम्॥

ஆபுக்நமஸ்ருண சில்லீ
ஹஸிதா யுக்மசர கார்முக விலாஸாம் ।
மந்த ஸ்மிதாஞ்சிதமுகீம்
மணிமயதாடங்க மண்டித கபோலாம் ॥

*இவளது சற்று வளைந்த புருவம் மன்மதனின் வில்லின் பெருமையைப் பரிகசிக்கிறது. புன்சிரிப்பால் அழகான முகமுள்ளவள். கன்னங்களில் ரத்னதாடங்கங்களின் ஒளிபரவி அழகுற்றவள். (96)*

कुरुविन्दतरणिनिलयां कुलाचलस्पर्धिकुचनमन्मध्याम्।
कुंकुमविलिप्तगात्रीं कुरुकुल्लां मनसि कुर्महे सततम्॥

குருவிந்ததரணி நிலயாம்
குலாசல ஸ்பர்த்தி குசநமன் மத்த்யாம் ।
குங்குமவிலிப்தகாத்ரீம்
குருகுல்லாம் மனஸி குர்மஹே ஸததம் ॥

*குருகுல்லா தேவி மாணிக்யத் தோணியிலிருப்பவள். குலபர்வதங்களுடன் போட்டியிடுகிற மார்பகத்தால் இடை குனிந்திருப்பவள். உடல் முழுவதும் குங்குமப்*

பூவின் குழம்பைப்பூசியிருப்பவள். அவளை எப்போதும் உள்ளத்தில் கொள்வோம். (97)

तत्सालोत्तरभागे भानुमयं वप्रमाश्रये दीप्तम्।
मध्यं च विपुल मनयोर्मन्ये विश्रान्तमातपोद्गारम्॥

தத்ஸாலோத்தரபாகே
பாநுமயம் வப்ரமாச்ரயே தீப்தம் ।
மத்த்யஞ்ச விபுல மநயோ:
மந்யேऽவிச்ராந்தம் ஆதபோத்காரம் ॥

அஹங்காரக் கோட்டைக்கு வடக்கில் ஒளிமிக்க ஸூர்யக்கோட்டை. அஹங்கார - ஸூர்யக் கோட்டைகளுக்கு இடையே மிக விஸ்தாரமான ஆ(பாலா)தபோத்காரம் (இளம் சூரிய ஒளி வெளிப்படுமிடம்.) இரண்டையும் தியானிக்கிறேன். (98)

तत्र कुरुविन्दपीठे तामरसे कनककर्णिकाघटिते।
आसीन मरुणवाससं अम्लानप्रसवमालिकाभरणम्॥

தத்ர குருவிந்தபீடே
தாமரஸே கனககர்ணிகாகடிதே ।
ஆஸீன மருணவாஸஸம்
அம்லாநப்ரஸவ மாலிகாபரணம் ॥

ஆதபோத்காரத்தில் மாணிக்கரத்னபீடத்தில் தங்கமொக்குள்ள தாமரைப் பூ மீது அமர்ந்துள்ள மார்த்தாண்ட பைரவர் சிவந்த ஆடை உடுத்தியவர். வாடாத பூமாலை பூண்டவர். (99)

चक्षुष्मतीप्रकाशनशक्तिच्छायासमारचितकेलिम्।
माणिक्यमकुटरम्यं मन्ये मार्तण्ड भैरवं हृदये॥

சக்ஷுஷ்மதீப்ரகாசந
சக்திச்சாயாஸமாரசித கேளிம் ।
மாணிக்ய மகுட ரம்யம்
மந்யே மார்தண்ட பைரவம் ஹ்ருதயே ॥

*சக்ஷுஷ்மதீ, பிரகாசநசக்தி, சாயாதேவி இவர்களுடன் கேளிக்கையில் ஈடுபட்டவர், மாணிக்ய கிரீடம் தரித்து அழகுற்றவர். அந்த மார்தண்டபைரவரை உள்ளத்தில் தியானிக்கிறேன். (100)*

इन्दुमयसालमीडे तस्योत्तरतस्तुषारगिरिगौरम्।
अत्यन्तशिशिरमारुतमनयो र्मध्यं च चन्द्रिकोद्गारम्॥

இந்து மயஸாலமீடே
 தஸ்யோத்தரதஸ்துஷாரகிரி கௌரம் ।
அத்யந்த சிசிரமாருதம்
 அநயோர் மத்த்யம் ச சந்திரிகோத்காரம் ॥

*ஸுூர்யக்கோட்டைக்குள் இமய மலை போல் வெண்ணிறம் கொண்ட சந்திரக் கோட்டை. ஸுூரிய சந்திரக் கோட்டைகளுக்கிடையே இடைவெளி சந்திரிகோத்காரம். (நிலவு வெளிப்படுமிடம்.) இரண்டையும் துதிக்கிறேன். (101)*

तत्र प्रकाशमानं तारानिकरैः परिष्कृतोद्देशम्।
अमृतमयकान्तिकन्दल मन्तः कलयामि कुन्दसितमिन्दुम्॥

தத்ர ப்ரகாசமாநம்
 தாராநிகரை: பரிஷ்க்ருதோத்தேசம் ।
அம்ருதமயகாந்தி கந்தளம்
 அந்த: கலயாமி குந்த ஸிதமிந்தும் ॥

*அங்கே அமுதமயமான ஒளி நிரம்பியவரும் முல்லைப் பூ போல் வெளுத்தவரும் நக்ஷத்திரக் கூட்டங்களால் சூழ்நிலையை ஒளிமயமாக்கியவருமான சந்திரனை உள்ளத்தில் நினைக்கிறேன். (102)*

शृङ्गारसालमीडे शृङ्गोल्लसितं तदुत्तरे भागे।
मध्यस्थले तयोरपि महितां शृङ्गारपूर्विकां परिघाम्॥

ச்ருங்காரஸாலமீடே
 ச்ருங்கோல்லஸிதம் ததுத்தரே பாகே ।

மத்த்யஸ்த்தலே தயோரபி
மஹிதாம் ச்ருங்காரபூர்விகாம் பரிகாம் ॥

*அதன் வடக்கில் சிகரங்களால் அழகிய சிருங்காரக் கோட்டை, சந்திர - சிருங்காரகோட்டைகளிடையே பெரிதும் மதிக்கப்படுகிற சிருங்கார பரிகை (அகழ்) இரண்டையும் வணங்குகிறேன். (103)*

तत्र मणिनौस्थिताभिः तपनीयारचितशृङ्गहस्ताभिः ।
शृङ्गारदेवताभिः सहितं परिखाधिपं भजे मदनम् ॥

தத்ர மணி நௌஸ்த்திதாபி:
தபநீயாரசிதச்ருங்க ஹஸ்தாபி: ।
ச்ருங்கார தேவதாபி:
ஸஹிதம் பரிகாதிபம் பஜே மதனம் ॥

*ரத்தினத்தாலான தோணிகளிலுள்ள சிருங்கார தேவதைகள் தங்கத்தாலான கொம்புகளைக் கையில் ஏந்தியுள்ளார்கள். அவர்களுடன் கூடிய சிருங்கார பரிகை அதிபதியான மன்மதனை வழிபடுகிறேன். (104)*

शृङ्गारवरणवर्यस्योत्तरतः सकलविबुधसंसेव्यम् ।
चिन्तामणिगणरचितं चिन्तां दूरीकरोतु मे सदनम् ॥

ச்ருங்காரவரணவர்யஸ்யோத்தரத:
ஸகலவிபுத ஸம்ஸேவ்யம் ।
சிந்தாமணி கண ரசிதம்
சிந்தாம் தூரீகரோது மே ஸதனம் ॥

*சிறந்த சிருங்காரக் கோட்டையின் வடக்கே எல்லா தேவர்களும் வழிபடுமிடமும், சிந்தாமணி ரத்தினங்களாலானதுமான (சிந்தாமணி கிருஹ)மாளிகை என் கவலையை அகற்றட்டும். (105)*

मणिसदनसालयोरधिमध्यं दशतालभूमिरुहदीर्घैः ।
पर्णैः सुवर्णवर्णैर्युक्तां काण्डैश्च योजनोत्तुङ्गैः ॥

மணி ஸதநஸாலயோரதிமத்த்யம்
தசதால பூமிருஹதீர்க்கை: ।
பர்ணைஸ் ஸுவர்ணவர்ணைர்
யுக்தாம் காண்டைச்ச யோஜநோத்துங்கை: ॥

*சிந்தாமணி கிருஹத்திற்கும் சிருங்காரக் கோட்டைக்கும் இடையே பத்மாடவீ என்ற தாமரைக் காடு உள்ளது. தாமரைகள் பத்து பனைமர உயரமும் தங்கநிற இலைகளும் யோஜனை தூரம் உயரம் கொண்ட தண்டுகளும் கொண்டவை. (106)*

मृदुलैस्तालीपञ्चकमानैः मिलितां च केसरकदम्बैः ।
सन्ततगलितमरन्द स्रोतो निर्यन्मिलिन्द सन्दोहाम् ।।

ம்ருதுளைஸ் தாலீபஞ்சகமாநை:
மிலிதாம் ச கேஸரகதம்பை: ।
ஸந்ததகலித மரந்த
ஸ்ரோதோ நிர்யன் மிலிந்த ஸந்தோஹாம் ॥

*ஐந்து பனைமர உயரமுள்ள கேஸரங்கள் கொண்டவை. எப்போதும் தேனருவி கசிந்து கொண்டிருக்க அதில் வண்டுகள் குவிந்து நிற்கும். (107)*

पाटीरपवनबालकधाटीनिर्यत्परागपिञ्जरिताम् ।
कलहंसी कुलकलकलकूलंकषनिनदनिचयकमनीयाम् ।।
पद्माटवीं भजामः परिमलकल्लोल पक्ष्मलोपान्ताम् ।।

பாடீர பவந பாலக
தாடீ நிர்யத் பராக பிஞ்ஜரிதாம் ।
கலஹம்ஸீ குல கல கல
கூலங்கஷ நிநத நிசய கமநீயாம் ॥
பத்மாடவீம் பஜாம: பரிமள கல்லோல
பக்ஷ்மலோபாந்தாம் ॥

*சந்தனமணத்துடன் இளந்தென்றல் வீசுவதால் மகரந்தத்தூள் கலந்து மணக்கிற அந்தத் தாமரைக்காடு, அன்னப் பறவைக் கூட்டத்தின் கல கல ஒலி ஓடையின் இருகரைகளில் மோதி மனத்திற்கு இன்பம் தருகிறது. மணமிக்க அலைகளின் மோதலால் அழகிய கரைகள் உள்ள அந்த பத்மாடவீயை வணங்குகிறேன். (108)*

देव्यर्घ्यपात्रधारी तस्याः पूर्वदिशि दशकलायुक्तः ।
वलयितमूर्तिर्भगवान् वह्निः क्रोशोन्नतश्चिरं पायात् ।।

தேவ்யர்க்க்யபாத்ரதாரீ
தஸ்யா: பூர்வதிசி தசகலாயுக்த: ।
வலயித மூர்த்திர் பகவான்
வந்ஹி: க்ரோசோந்நதச் சிரம் பாயாத் ॥

*பத்மாடவியின் கிழக்கில் தேவியின் அர்க்கிய பாத்திரத்தை ஏந்திப் பத்துகலைகளுடன் மண்டலமாகச் சூழ்ந்து ஒரு குரோசம் உயரம் எரிகிற பகவான் அக்னி வெகுகாலம் காப்பாராக. (இதுவந்ஹிப்ராகாரம். அக்னியின் கலைகள் பத்து - தூம்ரா, ஊஷ்மா, ஜ்வலினீ, ஜ்வாலினீ, விஸ்புலிங்கினீ, ஸுஸ்ரீ, ஸுரூபா, கபிலா, ஹவ்யவாஹினீ, கவ்யவாஹினீ என. க்ரோசம் -கால் யோஜனை 3-3½ கி.மீ. அர்க்கிய பாத்திரத்தின் ஆதாரமாக அக்னி மண்டலத்தைக் கொள்வர்.) (109)*

तत्राधारे देव्याः पात्रीरूपः प्रभाकरः श्रीमान् ।
द्वादशकलासमेतो ध्वान्तं मम बहुलमान्तरं भिन्द्यात् ।।

தத்ராதாரே தேவ்யா:
பாத்ரீரூப: ப்ரபாகர: ஸ்ரீமான் ।
த்வாதசகலாஸமேதோ
த்த்வாந்தம் மம பஹுலமாந்தரம் பிந்த்யாத் ॥

*அந்த அக்னி மண்டலமாகிற ஆதாரத்தின் மீது அர்க்க்யம் வைக்கிற பாத்திரத்தின் உருவகமான சீர் மிக்க ஸூர்யன் பன்னிரண்டு கலைகள் கூடியவராக என்*

*உள்ளத்துப் பேரிருளைத் தகர்க்கட்டும். (அர்க்கிய பாத்திரம் ஸௌர்யமண்டலம். தபினீ, தாபினீ, தூம்ரா, மரீசி, ஜ்வலிநீ, ருசி, ஸுஷும்நா, போகதா, விச்வா, போதினீ, தாரிணீ, க்ஷமா எனப் பன்னிரண்டு ஸௌர்ய கலைகள்.) (110)*

तस्मिन्दिनेशपात्रे तरङ्गितामोदं अमृतमयं अर्घ्यम्।
चन्द्रकलात्मकं अमृतं सान्द्रीकुर्यादमन्दमानन्दम्॥

தஸ்மின் திநேசபாத்ரே
தரங்கிதாமோதம் அம்ருதமயம் அர்க்க்யம்।
சந்த்ரகலாத்மகம் அம்ருதம்
ஸாந்த்ரீகுர்யாத் அமந்தமாநந்தம் ॥

*ஸௌரியனுலான அந்த பாத்திரத்தில் மணத்தை அலைபோல் பரப்புகிற அம்ருதமாகிய அர்க்க்யம் சந்திரகலைகளாலானது. அது ஆநந்தத்தை நெருக்கமுள்ள தாக்கட்டும். (111)*

अमृते तस्मिन्नभितो विहरन्त्यो विविधमणि तरणिभाजः।
षोडश कलाः सुधांशोः शोकादुत्तारयन्तु मामनिशम्॥

அம்ருதே தஸ்மிந்நபிதோ
விஹரந்த்யோ விவிதமணிதரணி பாஜ:।
ஷோடச கலா: ஸுதாம்சோ
சோகாதுத்தாரயந்து மாமநிசம் ॥

*அந்த அர்க்கிய அமுதத்தில் சுற்றிலும் பலவகை ரத்தினத்தோணிகளில் விளையாடுகின்ற பதினாறு சந்திர கலைகளும் என்னை எப்போதும் துயரிலிருந்து கரை ஏற்றட்டும். (அர்க்கியத்திற்கான நீர் சந்திரமண்டலம். அம்ருதா, மானதா, பூஷா, துஷ்டி, புஷ்டி, ரதி, த்ருதி, சசிநீ, ப்ரியா, காந்தி, ஜ்யோத்ஸநா, ஸ்ரீ, பிரீதி, அங்கதா, பூர்ணா, பூர்ணாம்ருதா என சந்திரனின் கலைகள் பதினாறு. (112)*

तत्रैव विहृतिभाजो धातृमुखानां च कारणेशानाम्।
सृष्ट्यादि रूपिकास्ताः शमयन्त्वखिलाः कलाश्च
सन्तापम्॥

தத்ரைவ விஹ்ருதி பாஜோ
  தாத்ருமுகாநாம் ச காரணேசாநாம் ।
ஸ்ருஷ்ட்யாதி ரூபிகாஸ்தா:
  சமயந்த்வகிலா: கலாச்ச ஸந்தாபம் ॥

*அந்த அர்க்கியத்தில் பிரும்மா முதலிய உலகின் காரணேச்வரர்கள் உலாவருகின்றனர். அதனுல் படைப்பு முதலியவை நடைபெறுகின்றன. அதற்கான பிரும்மா முதலியவரின் கலைகள் அனைத்தும் தாபத்தைத் தணிக்கட்டும். (பிரும்மா, விஷ்ணு, ருத்ரர், ஈச்வரர், ஸதாசிவர் என்ற ஐவர் உலகின் காரண புருஷர்கள். (காரணேசர்கள்.), படைப்பு, காப்பு, ஒடுக்கம், மறைப்பு, அனுக்ரஹம் என அவர்களின் பணிகள். அதற்கு உதவ, பிரும்மாவிற்கு ஸ்ருஷ்டி, ருத்தி, ஸ்ம்ருதி, மேதா, சாந்தி, லக்ஷ்மீ, த்யுதி, ஸ்த்திரா, ஸ்த்திதி, ஸித்த்தி என பத்து கலைகள். விஷ்ணுவிற்கு, ஜரா, பாலிநீ, சாந்தி, ஈச்வரீ, ரதி, காமிகா, வரதா, ஹ்லாதினீ, ப்ரீதி, தீர்க்கா என பத்து கலைகள். ருத்திரருக்கு தீக்ஷ்ணா, ரௌத்ரீ, பயா, நித்ரா, தந்த்ரீ, க்ஷுதா, க்ரோதினீ, க்ரியா, உத்காரீ, ம்ருத்யு என பத்துகலைகள்; ஈச்வரருக்கு பீதா, ச்வேதா, அருணா, அஸிதா என நான்கு கலைகள்; ஸதாசிவருக்கு நிவ்ருத்தி, ப்ரதிஷ்ட்டா, வித்யா, சாந்தி, இந்த்திகா, தீபிகா, ரேசிகா, மோசிகா, பரா, ஸூக்ஷ்மா, ஸூக்ஷ்மாம்ருதா, ஜ்ஞானா, ஜ்ஞானாம்ருதா, ஆப்யாயினீ, வ்யாபினீ, வ்யோமரூபா என பதினறு கலைகள். ஆக ஐம்பதுகலைகள் அர்க்க்யாம்ருதத்தின் விளைவானவை.) (113)*

कीनाशवरुणकिन्नरराजदिगन्तेषु रत्नगेहस्य ।
कलयामि तान्यजस्रं कलयन्त्यायुष्यमर्घ्यपात्राणि ॥

கீநாச வருண கிந்நர
  ராஜதிகந்தேஷு ரத்னகேஹஸ்ய ।
கலயாமி தான்யஜஸ்ரம்
  கலயந்த்வாயுஷ்யம் அர்க்க்ய பாத்ராணி ॥

*சிந்தாமணி கிருஹத்தின் தெற்கு, மேற்கு, வடக்கு திக்குகளில் அமைக்கப்பெற்றுள்ள அந்த அர்க்ய பாத்திரங்களை எப்போதும் தியானிக்கிறேன். அவை என் ஆயுளை வளர்க்கட்டும். (114)*

पात्रस्थलस्य पुरतः पद्मारमण विधिपार्वतीशानाम्।
भवनानि शर्मणे नो भवन्तु भासा प्रदीपित जगन्ति।।

பாத்ரஸ்த்தலஸ்ய புரத:
பத்மாரமண விதி பார்வதீசாநாம் ।
பவநாநி சர்மணே நோ
பவந்து ப்பாஸா ப்ரதீபித ஜகந்தி ॥

*அந்த பாத்திரங்கள் வைக்கப்பட்டுள்ள இடத்திற்கு எதிரில் அமைந்துள்ள விஷ்ணு, பிரம்மா, சிவன் இவர்களது மாளிகைகள் ஒளியால் உலகை விளக்குகின்றன. அவை எனக்கு நலம் புரியட்டும். (115)*

सदनस्यानलकोणे सततं प्रणमामि कुण्डमाग्नेयम्।
तत्र स्थितं च वह्निं तरलशिखाजटिलमम्बिकाजनकम्।।

ஸதநஸ்யாநலகோணே
ஸததம் ப்ரணமாமி குண்டமாக்நேயம் ।
தத்ர ஸ்த்திதம் ச வந்ஹிம்
தரளசிகா ஜடிலம் அம்பிகா ஜனகம் ॥

*சிந்தாமணி க்ருஹத்தின் தென்கிழக்கில் லலிதை தோன்றிய இடமான அக்னி குண்டம் உள்ளது. அதனையும் அதிலுள்ள கொழுந்து விட்டு ஆடி அடர்ந்து எரிகிற அக்கினியையும் எப்போதும் வணங்குகிறேன். (இந்த அக்னிகுண்டம் சிதக்னி குண்டமெனப்படும்). (116)*

तस्यासुरदिशि तादृशरत्नपरिस्फुरित पर्वनवकाढ्यम्।
चक्रात्मकं शताङ्गं शतयोजनमुन्नतं भजे दिव्यम्।।

தஸ்யாஸுரதிசி தாத்ருச
ரத்ந பரிஸ்ப்புரித பர்வ நவகாட்ட்யம் ।

சக்ராத்மகம் சதாங்கம்
சதயோஜநமுன்னதம் பஜே திவ்யம் ॥

*சிந்தாமணி கிருஹத்தின் தென்மேற்கில், சிந்தா மணிரத்தினத்தாலான ஒளிமிக்க ஒன்பது தட்டுகளுள்ளதும் நூறுயோஜனை உயரமுள்ளதும் ஸ்ரீ சக்கிரவடிவில் உருவானதுமான தெய்வத்தன்மை பெற்ற ரதத்தை வழிபடுகிறேன். (இதனைச் சக்ரராஜரதம் என்பர்.) (117)*

तत्रैव दिशि निषण्णं तपनीय ध्वजपरंपराश्लिष्टम्।
रथमपरं च भवान्या रचयामो मनसि रत्नमय चूडम्।।

தத்ரைவ திசி நிஷண்ணம்
தபநீயத்த்வஜ பரம்பரா ச்லிஷ்டம் ।
ரதமபரம் ச பவான்யா:
ரசயாமோ மநஸி ரத்னமய சூடம் ॥

*அதே திசையில் தங்கக் கொடிகள் வரிசையாக இணைக்கப்பெற்று ரத்தினத்தாலான சிகரம் கொண்ட தேவியின் மற்ெறாரு ரதம் உள்ளது. அதனைத் தியானிப்போம். (118)*

भवनस्य वायुभागे परिष्कृतो विविधवैजयन्तीभिः ।
रचयतु मुदं रथेन्द्रः सचिवेशान्याः समस्तवन्द्यायाः ।।

பவநஸ்ய வாயுபாகே
பரிஷ்க்ருதோ விவிதவைஜயந்தீபி: ।
ரசயது முதம் ரதேந்த்ர:
ஸசிவேசான்யா: ஸமஸ்த வந்த்யாயா: ॥

*சிந்தாமணி க்ருஹத்தின் வடமேற்கில் பலவகைப்பட்ட கொடிகளுடன் எல்லோராலும் வணங்கத்தக்க மந்திரிணீ தேவியின் சிறந்த ரதம் உள்ளது. அது ஆனந்தமளிக்கட்டும் (இதனை கேய சக்ரரதம் என்பர்). (119)*

कुर्मोऽधिहृदयमनिशं क्रोडास्यायाः शताङ्गमूर्धन्यम्।
रुद्रदिशि रत्नधाम्नो रुचिरपला(ता) काप्रपञ्च कञ्चुकितम्॥

குர்மோऽதிஹ்ருத்யமநிசம்
க்ரோடாஸ்யாயா: சதாங்க மூர்த்த்ன்யம்।
ருத்ரதிசி ரத்னதாம்நோ
ருசிர பலா(தா)கா ப்ரபஞ்ச கஞ்சுகிதம் ॥

*சிந்தாமணி கிருஹத்தின் வடகிழக்கில் அழகிய கொடிகளால் மறைக்கப்பெற்ற வாராஹியின் சிறந்த ரதத்தை எப்போதும் உள்ளத்திலுள்ள கொள்வோம். (இதை கிரி சக்ரரதம் என்பர்.) (120)*

परितो देवीधाम्नः प्रणीतवासा मनुस्वरूपिण्यः।
कुर्वन्तु रश्मिमालाकृतयः कुशलानि देवता निखिलाः॥

பரிதோ தேவீ தாம்ந:
ப்ரணீதவாஸா மநுஸ்வரூபிண்ய: ।
குர்வந்து ரச்மிமாலாக்ருதய:
குசலானி தேவதா நிகிலா: ॥

*தேவியின் மாளிகையைச் சுற்றி மந்திர வடிவினர்களான எல்லா தேவதைகளும் ஒளிக்கதிர் வரிசை (ரச்மிமாலா)யாக உருவெடுத்து வசிக்கின்றனர். அவர்கள் நலனைச் செய்யட்டும். (121)*

प्राग्द्वारस्य भवानीधाम्नः पार्श्वद्वयारचितवासे।
मातङ्गीकिटिमुख्यौ मणि सदने मनसि भावयामि चिरम्॥

ப்ராக் த்வாரஸ்ய பவாநீதாம்ந:
பார்ச்வ த்வயாரசிதவாஸே ।
மாதங்கீகிடிமுக்க்யௌ
மணிஸதநே மநஸி பாவயாமி சிரம் ॥ 122॥

*தேவியின் மாளிகையின் கிழக்கு வாயிலின் இருபுறங்களிலும் ரத்னமயமான மாளிகைகளில் மந்திரிணி*

*(மாதங்கி)யும் வாராஹியும் வசிக்கின்றனர். அவர்களை வெகுநேரம் தியானிக்கிறேன். (122)*

योजनयुगलाभोगा क्रोशपरीणाहयैव भित्त्या च।
चिन्तामणिगृहभूमिर्जीयादाम्नायमयचतुर्द्वारा॥

யோஜநயுகலாபோகா
க்ரோசபரீணாஹயைவ பித்த்யா ச ।
சிந்தாமணிக்ருஹபூமிர்
ஜீயாதாம்நாயமய சதுர்த்வாரா ॥

*இரு யோஜனைகள் பரப்புள்ள சிந்தாமணி கிருஹம் கால்யோஜனை தடிமனுள்ள சுற்றுச்சுவருடன் வேதங்களாலான நான்கு துவாரங்களுடன் உள்ளது. அது மேன்மையுடன் துலங்கட்டும். (123)*

द्वारे द्वारे धाम्नः पिण्डीभूता नवीनबिम्बाभाः।
विदधतु विपुलां कीर्तिं दिव्या लौहित्यसिद्धयो देव्यः॥

த்வாரே த்வாரே தாம்ந:
பிண்டீபூதா நவீனபிம்பாபா: ।
விததது விபுலாம் கீர்திம்
திவ்யா லௌஹித்ய ஸித்த்தயோ தேவ்ய: ॥

*சிந்தாமணி கிருஹத்தின் ஒவ்வொரு துவாரத்திலும் தெய்வத்தன்மை மிக்கவர்களும் விமர்ச சக்தியின் செயலாற்றலே உருவானவர்களுமான தேவிகள் புதிய பதுமைகள் போல் இறுகிய உருப்பெற்றவர்களாக உள்ளனர். அவர்கள் பெரும் புகழைத்தரட்டும். (பிரகாசமான பிரும்மத்திடம் தனித்தன்மையை வெளிப்படுத்தாது அடங்கியுள்ள சக்தி, உலகமாக விரிவதற்காக வெளிப்பட்டு பற்பலஆற்றல்களாக விரிவடைகிற நிலை விமர்சம். நிறமற்ற ஸூர்ய ஒளி விடியற்காலையில் தன் ஆற்றலை விளக்குகிற முதல் நிலையாக லௌஹித்யம் என்ற செம்மையை முதலில் புதிதாகக் காட்டுவது போன்றது. லௌஹித்யம் (செம்மை)*

*என்பது விமர்ச நிலையின் ஒரு விளக்கம். தேவியைப்பற்றிய அறிமுகம் பெற துவாரதேவிகளிடம் அந்த ஆற்றல்கள் பிண்டமாகப் பிடித்து வைக்கப்பட்டுள்ளன.) (124)*

मणिसदनस्यान्तरतो महनीये रत्नवेदिकामध्ये।
बिन्दुमयचक्रमीडे पीठानामुपरि विरचितावासम्॥

மணிஸதநஸ்யாந்தரதோ
மஹநீயே ரத்நவேதிகாமத்யே ।
பிந்துமய சக்ரமீடே
பீடாநாமுபரி விரசிதாவாஸம் ॥

*சிந்தாமணி கிருஹத்திலுள்ள, கொண்டாடத்தக்க ரத்னமேடையின் நடுவே எல்லா பீடங்களின் மீது இடம்பெற்றுள்ள பிந்துவாலான சக்கிரத்தைத் துதிக்கிறேன். (125)*

चक्राणां सकलानां प्रथममधः सीमफलकवास्तव्याः।
अणिमादि सिद्धयो मां अवन्तु देवीप्रभास्वरूपिण्यः॥

சக்ராணாம் ஸகலாநாம்
ப்ரதமமத: ஸீமபலகவாஸ்தவ்யா: ।
அணிமாதிஸித்த்தயோ மாம்
அவந்து தேவீ ப்ரபாஸ்வரூபிண்ய: ॥

*எல்லா சக்கிரங்களுக்கும் அடித்தட்டில் வசிக்கிற அணிமா முதலிய ஸித்திதேவிகள் தேவியின் ஒளிக்கதிர் வடிவினர். அவர்கள் என்னைக் காப்பாற்றட்டும். (பேரொளியாக உள்ள தேவியிலிருந்து வெளிப்படுகிற ஒளிக்கதிர்களே ஆவரண தேவதைகள். தேவியிடமிருந்து வேறுபட்டவர்களல்ல. ''அணிமாதிபிர் ஆவ்ருதாம் மயூகை:''. அணிமா, லகிமா, மஹிமா, ஈசித்வம், வசித்வம், ப்ராகாம்யம், புக்தி, இச்சா, ப்ராப்தி, ஸர்வகாமா என்ற பத்து ஸித்திதேவிகள்.) (126)*

अणिमादि सिद्धिफलकस्योपरि हरिणाङ्क खण्डकृत चूडाः।
भद्रं पक्ष्मलयन्तु ब्राह्मीप्रमुखाश्च मातरोऽस्माकम्॥

அணிமாதிஸித்த்தி பலகஸ்யோபரி
ஹரிணாங்கக் கண்ட க்ருத சூடா: ।
பத்ரம் பக்ஷ்மலயந்து
ப்ராம்ஹீ ப்ரமுகாச்ச மாதரோऽஸ்மாகம் ॥

*அணிமாதி ஸித்திதேவதைகளாலான பலகைக்கு மேலமர்ந்த பிராம்ஹீ முதலான மாதாக்கள் சந்திரனின் பிறையைச் சூடியவர்கள் தேவியின் ஒளிக்கதிர்வடிவினர். அவர்கள் என் க்ஷேமத்தை உறுதிபெறச் செய்யட்டும். (விழித்திருக்கச் செய்யட்டும்.) (ப்ராம்ஹீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ என மாதாக்கள் எண்மர்.) (127)*

तस्योपरि मणिफलके तारुण्योत्तुङ्ग पीनकुचभाराः।
संक्षोभिणीप्रधानाः भ्रान्तिं विद्रावयन्तु दश मुद्राः॥

தஸ்யோபரி மணிபலகே
தாருண்யோத்துங்க பீநகுசபாரா: ।
ஸம்க்ஷோபிணீ ப்ரதாநா:
ப்ப்ராந்திம் வித்ராவயந்து தச முத்ரா: ॥

*அதற்கு மேலுள்ள ரத்தினப் பலகையில் யௌவனத்தால் நிமிர்ந்த பருத்த மார்பகங்களுள்ள ஸம்க்ஷோபிணீயை முதல்வியாகக் கொண்ட முத்ரா தேவிகள் உள்ளனர். அவர்கள் குழப்பத்தை விரட்டட்டும். (முத்ரா சக்திகள் பத்து. ஸர்வ என்ற அடைமொழியைக் கொண்ட ஸம்க்ஷோபிணீ, வித்ராவிணீ, ஆகர்ஷிணீ, வசங்கரீ, உந்மாதினீ, மஹாங்குசா, கேசரீ, யோனி, திரிகண்டா என இந்த சக்திகள் முத்திரை யிட்டு மறைத்து வைக்கப்பட்டுள்ளவை, அவற்றை முத்திரைகள் மூலம் வெளிப்படுத்துவர்.) (128)*

फलकत्रयस्वरूपे पृथुले त्रैलोक्यमोहने चक्रे।
दीव्यन्तु प्रकटाख्याः तासां कर्त्री च भगवती त्रिपुरा ।।

பலகத்ரயஸ்வரூபே
ப்ருதுலே த்ரைலோக்ய மோஹனே சக்ரே ।
தீவ்யந்து ப்ரகடாக்க்யா:
தாஸாம் கர்த்ரீ ச பகவதீ த்ரிபுரா ॥

*மூன்று பலகைகளாக உருவான த்ரைலோக்ய மோஹனமெனும் சக்கிரத்தில் பிரகடா என்ற யோகினிகள் உள்ளனர். அவர்களைத் தோற்றுவித்தவள் பகவதியான திரிபுரை. ( ஸ்ரீசக்ரத்தின் முதல் வெளி ஆவரணம் த்ரைலோக்ய மோஹனம் எனும் சக்கிரம். அதிலுள்ள யோகினிகள் பிரகடா எனப்படுவர். தேவியை அடைய தேவியே வெளி உலகப்பற்றிலிருந்து பிரித்துப் பரமாத்மதத்துவமான தன்னிடம் யோகமடையச் செய்ய யோகினி வடிவேற்கிறாள். ஸம்க்ஷோபிணி முதலியவரும் பிராம்மீ முதலானவரும் அணிமா முதலிய ஸித்தி தேவிகளும் பிரகடயோகினிகளாவர். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று தேஹங்களில் ஸ்தூலத்தில் விழிப்பு நிலையில் தான் என்ற எண்ணம் உண்டாகிறது. இது பாமரனும் வெளிப்படையாக உணருமிடம். இவற்றில் மாறுதல் ஏற்படுத்தி உட்புறம் திருப்புபவரானதால் பிரகடா. வெளியிலுள்ள மூவுலகங்களையும் வசப்படுத்தி ஈர்க்கிற சக்தி உள்ளதால் இது திரைலோக்ய மோஹனம். இந்த பிரகடயோகினிகளின் தலைவி திரிபுரா எனும் சக்ரேச்வரி. அவள் மஹாதிரிபுரஸுந்தரியின் ஒரு ஒளிக்கதிரே.) (129)*

तदुपरि विमले धिष्ण्ये तरलदृशस्तरुणकोकनदभासः।
कामाकर्षिण्याद्याः कलये देवीः कलाधरशिखण्डाः ।।

தது பரி விமலே திஷ்ண்யே
தரள த்ருசஸ்தருணகோக நதபாஸ: ।
காமாகர்ஷிண்யாத்யா:
கலயே தேவீ: கலாதரசிகண்டா: ॥

*அதன் மீது தூய இருப்பிடத்தில் அலைபாய்கிற பார்வையுள்ளவர்களும் புதிய செவ்வல்லி நிறமுள்ளவர்களும் பிறை சூடியவர்களுமான காமாகர்ஷிணீ முதலிய தேவிகளைத் தியானிக்கிறேன். (காமாகர்ஷிணீ, புத்த்யாகர்ஷிணீ, அஹங்காராகர்ஷிணீ, சப்தாகர்ஷிணீ, ஸ்பர்சாகர்ஷிணீ, ரூபாகர்ஷிணீ, ரஸாகர்ஷிணீ, கந்த்தாகர்ஷிணீ, சித்தாகர்ஷிணீ, தைர்யாகர்ஷிணீ, ஸ்மிருத்யாகர்ஷிணீ, நாமாகர்ஷிணீ, பீஜாகர்ஷிணீ, ஆத்மாகர்ஷிணீ, அம்ருதாகர்ஷிணீ, சரீராகர்ஷிணீ, என பதினாறு யோகினிகள். நித்யா கலா தேவிகள் எனப்படுவர். குப்த யோகினிகள் என்ற இவர்கள் மறைந்து நிற்பவர், ஸ்தூல சரீரம் வழியே வெளிப்படாமல் ஸூக்ஷ்ம சரீரமான இந்திரியம் மனம் புத்தி அஹங்காரம் சித்தம் வாஸனை ஸம்ஸ்காரம் என்ற ஸூக்ஷ்மமான உணர்வுகளைத் தன் வசப்படுத்தி நித்தியப் பொருளை உணர்வதற்கு இட்டுச்செல்வது இவர்களது பணி. தேவியின் சிற்றொளி உருவினர். (130)*

सर्वाशापरिपूरकचक्रेऽस्मिन् गुप्तयोगिनी सेव्या ।
त्रिपुरेशी मम दुरितं तुद्यात्कण्ठावलंबिमणिहारा ।।

ஸர்வாசாபரிபூரக சக்ரேऽஸ்மின்
குப்தயோகினீ ஸேவ்யா ।
த்ரிபுரேசீ மம துரிதம்
துத்யாத் கண்ட்டா வலக்ன மணிஹாரா ॥

*இந்த ஸர்வாசாபரி பூரகம் எனும் சக்கிரத்தில் குப்த யோகினிகளால் பணிவிடை புரியப்படுகிற, கழுத்தில் ரத்னஹாரம் பூண்ட திரிபுரேசீ எனும் சக்ரேச்வரீ என் பாபத்தைப் போக்கட்டும். (எதிர்பார்ப்புகளனைத்தையும் நிறைவுறச் செய்வதால் ஸர்வாசாபரிபூரகம். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று சரீரங்களும் இவளது ஆளுகைக்குட்படுவதால் திரிபுரேசீ.) (131)*

तस्योपरि मणिपीठे ताम्रांभोरुहदलप्रभाशोणाः ।
ध्यायाम्यनङ्ग कुसुमाप्रमुखा देवीश्च विधृतकूर्पासाः ।।

தஸ்யோபரி மணிபீடே
  தாம்ராம்ப்போருஹதளப்ரபா சோணா: ।
த்யாயாம்யநங்க குஸுமா
  ப்ரமுகா தேவீச்ச வித்த்ருத கூர்பாஸா: ॥

*அதன் மீது ரத்தின பீடத்தில் செந்தாமரை இதழ் ஒளி போன்று சிவந்தவர்களும் மார்புக்கச்சு அணிந்தவர்களுமான அநங்க குஸுமா முதலிய தேவிகளைத் தியானிக்கிறேன். (அநங்க குஸுமா, அநங்க மேகலா, அநங்கமதநா, அநங்கமதநாதுரா, அநங்க ரேகா, அநங்கவேகினீ, அநங்காங்குசா, அநங்கமாலினீ என்ற யோகினிகள் எண்மர்.) (132)*

संक्षोभकारकेऽस्मिंश्चक्रे श्रीत्रिपुरसुन्दरी साक्षात्।
गोप्त्री गुप्ततराख्या गोपायतु मां कृपार्द्रया दृष्ट्या ॥

ஸங்க்ஷோபகாரகேऽஸ்மின்
  சக்ரே ஸ்ரீத்ரிபுரஸுந்தரீ ஸாக்ஷாத் ।
கோப்த்ரீ குப்ததராக்க்யா கோபாயது மாம்
  க்ருபார்த்ரயா த்ருஷ்ட்யா॥

*ஸம்க்ஷோபகாரகம் என்ற இந்த சக்ரத்தில் அநங்ககுஸுமா முதலிய குப்ததரயோகினிகளுடன் காப்பாற்றுகின்றவளான ஸ்ரீதிரிபுரஸுந்தரீ என்ற சக்ரேச்வரீ என்னைக் கருணையில் நனைந்த பார்வையால் காப்பாற்றட்டும். (பலவாகவிருப்பதை மத்தித்துக் குழப்பிக் குழைத்து ஒன்றுக்கும் ஆற்றல் ஸர்வஸம்க்ஷோபணம். மூலதத்வங்களான மஹத்தும் அஹங்காரமும், பிரகிருதியும் புருஷனும் க்ஷோபண மடைந்து இணைந்ததன் விளைவுகள். அவை மேலும் க்ஷோபணமடைந்து பூத தன்மாத்திரங்கள், பூதங்கள், ஜ்ஞானேந்திரியம், கர்மேந்திரியம் அந்தக் கரணம், ஜீவன் என்று விரிந்து தனித்து தன்னைச் சேர்த்து எட்டாயின. அவை முன் சொன்ன குப்த நிலைக்கு முற்பட்டவை. மிகவும் குப்தம் - குப்ததரம். க்ஷோபிணீ ஸூக்ஷ்மரூபிணீ*

*(ல.ஸ) முப்புரங்களான ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களுள் அழகாக இருப்பவள் - ஸ்ரீத்ரிபுரஸுந்தரீ). (133)*

संक्षोभिणीप्रधानाः शक्तीः तस्योर्ध्ववलयकृतवासाः ।
आलोलनीलवेणीः अन्तः कलयामि यौवनोन्मत्ताः ।।

ஸங்க்ஷோபிணீ ப்ரதாநா:
சக்தீ: தஸ்யோர்த்த்வவலயக்ருத வாஸா: ।
ஆலோலநீலவாணீ:
அந்த: கலயாமி யௌவநோந்மத்தா: ॥

*அதன் மீதுள்ள வட்டத்தில் வசிக்கிற ஸங்க்ஷோபிணீ முதலிய சக்திகள் கூந்தல் பின்னல்களாட, யௌவனத்தால் மதர்த்துள்ளனர். அவர்களை உள்ளத்தில் கொள்கிறேன். (ஸர்வ என்ற அடைமொழியுடன் ஸங்க்ஷோபிணீ, வித்ராவிணீ, ஆகர்ஷிணீ, ஆஹ்லாதிநீ, ஸம்மோஹினீ, ஸ்தம்ப்பினீ, ஜ்ரும்ப்பிணீ, வசங்கரீ, ரஞ்ஜினீ, உந்மாதினீ, அர்த்தஸாதினீ, ஸம்பத்தி பூரணீ, மந்த்ரமயீ, த்வந்த்வ க்ஷயங்கரீ என்ற பதிநான்கு யோகினிகள்.) (134)*

सौभाग्यदायकेऽस्मिंश्चक्रेशी त्रिपुरवासिनी जीयात् ।
शक्तीश्च संप्रदायाभिधाः समस्ताः प्रमोदयन्त्वनिशम् ।।

ஸௌபாக்யதாயகேऽஸ்மின்
சக்ரேசீ த்ரிபுரவாஸிநீ ஜீயாத் ।
சக்தீச்ச ஸம்ப்ரதாயாபிதா:
ஸமஸ்தா: ப்ரமோதயந்த்வநிசம் ॥

*இந்த ஸௌபாக்யதாயகமெனும் சக்ரத்தில் அதன் ஈசுவரியான திரிபுரவாஸினீ பெருமையுடன் விளங்கட்டும். ஸம்ப்ரதாய யோகினிகள் என்ற அனைத்து சக்திகளும் எப்போதும் மகிழ்விக்கட்டும். (குரு சீடனுக்குப் போதிப்பது, அந்த சீடன் குருவாகி அவனது சிஷ்யனுக்குப் போதிப்பது என்பது ஸம்ப்ரதாயம். உரிமைப்பொருளை உரிமையுள்ளவரிடம் சேர்ப்பது என்ற முறையில் தேவியே குருவடிவில் வந்து உபதேசிப்பதாகும். அதற்கான*

*யோகினிகள் ஸங்க்ஷோபிணீ முதலியவர்கள். பூர்வபுண்யத்தின் பயனாகவும் தெய்வ அருளாலும் பெறுவது ஸௌபாக்யம். அதைத் தரும் சக்கிரம். இது தெய்வ அருளால் குரு கிடைப்பார். "தேசிக ரூபேண தர்சிதாப்யுதயாம்". குருமூர்தே த்வாம் நமாமிகாமாக்ஷி." (135)*

मणिपीठोपरि तासां महति चतुर्हस्तविस्तृते वलये।
सन्ततविरचितवासाः शक्तीः कलयामि सर्वसिद्धिमुखाः॥

மணி பீடோபரி தாஸாம்
    மஹதி சதுர்ஹஸ்த விஸ்த்ருதே வலயே ।
ஸந்ததவிரசிதவாஸா: சக்தீ:
    கலயாமி ஸர்வஸித்த்தி முகா: ॥

*ஸம்பிரதாய யோகினிகளின் மணி பீடத்திற்கு மேல், உள்ள நான்கு கைகள் பரப்புள்ள பெரிய வளையத்தில் எப்போதும் வசிக்கிற ஸர்வஸித்தி முதலிய சக்திகளை தியானிக்கிறேன். (ஸர்வ ஸித்திப்ரதா, ஸர்வ ஸம்பத்ப்ரதா, ஸர்வப்ரியங்கரீ, ஸர்வமங்கள காரிணீ, ஸர்வகாமப்ரதா, ஸர்வதுக்கவிமோசினீ, ஸர்வ ம்ருத்யுப்ரசமனீ, ஸர்வவிக்க்ந நிவாரிணீ, ஸர்வாங்க ஸுந்தரீ, ஸர்வஸௌபாக்யதாயினீ, என்ற பத்து யோகினிகள். (136)*

सर्वार्थसाधकाख्ये चक्रेऽमुष्मिन् समस्तफलदात्री।
त्रिपुराश्रीर्मम कुशलं दिशतादुत्तीर्णयोगिनी सेव्या॥

ஸர்வார்த்தஸாதகாக்க்யே
    சக்ரேऽமுஷ்மின் ஸமஸ்தபலதாத்ரீ ।
த்ரிபுரா ஶ்ரீர் மம குசலம்
    திசதாத் உத்தீர்ணயோகினீ ஸேவ்யா ॥

*ஸர்வார்த்த ஸாதகமெனும் இந்த சக்கிரத்தில் எல்லா பலன்களையும் தருகிற வழிபாட்டிற்குரிய திரிபுரா ஶ்ரீ என்கிற உத்தீர்ணயோகினீ எனக்கு நலம் புரியட்டும். (ஆசாரியன், சீடன், வித்யை என்ற முக்கோணம்*

*ஒன்றையொன்று அண்டி நிற்கிற திரிபுடீ. அதனைக் குலம் என்பர். ஆசாரியனுக்கும் சீடனுக்கும் உள்ள தொடர்பு விரிந்து ஞானபரம்பரை விரிவடையச் செய்கிற சக்தி குலோத்தீர்ணா. ஸர்வஸித்திப்ரதா முதலிய சக்திகள் அத்தகையவை. நாடியதனைத்தையும் தருவதால் இந்த சக்கிரம் ஸர்வார்த்த ஸாதகம்.) (137)*

तासां निलयस्योपरि धिष्ण्ये कौसुंभकञ्चुकमनोज्ञाः ।
सर्वज्ञाद्या देव्यः सकलाः संपादयन्तु मम कीर्तिम् ।।

தாஸாம் நிலயஸ்யோபரி
  திஷ்ண்யே கௌஸுஂம்ப கஞ்சுகமனோஜ்ஞா: ।
ஸர்வஜ்ஞாத்யா தேவ்ய:
  ஸகலா: ஸம்பாதயந்து மம கீர்திம் ॥

*இந்த யோகினிகளின் இருப்பிடத்திற்கு மேல் சிவந்த பட்டாலான ரவிக்கை தரித்த ஸர்வஜ்ஞா முதலிய அனைத்து சக்திகளும் எனக்கு புகழைத்தரட்டும். (ஸர்வஜ்ஞா, ஸர்வ சக்தி, ஸர்வைச்வர்யப்ரதா, ஸர்வஜ்ஞானமயீ, ஸர்வவியாதி விநாசினீ, ஸர்வாதாரஸ்வரூபா, ஸர்வபாபஹரா, ஸர்வாநந்தமயீ, ஸர்வரக்ஷாஸ்வரூபிணீ, ஸர்வேப்ஸிதபலப்ரதா, எனப் பத்து யோகினிகள். (138)*

चक्रे समस्तरक्षाकरनाम्न्यस्मिन् समस्तजनसेव्याम् ।
मनसि निगर्भासहितां मन्ये श्रीत्रिपुरमालिनीं देवीम् ।।

சக்ரே ஸமஸ்த ரக்ஷாகர
  நாம்ந்யஸ்மின் ஸமஸ்த ஜநஸேவ்யாம் ।
மநஸி நிகர்ப்பாஸஹிதாம்
  மந்யே ஸ்ரீ த்ரிபுரமாலினீம் தேவீம் ॥

*ஸர்வ ரக்ஷாகரம் என்ற இந்த சக்கிரத்தில் எல்லா மக்களாலும் வணங்கத்தக்க நிகர்ப்பயோகினிகளுடன் கூடிய ஸ்ரீத்ரிபுரமாலினி என்ற தேவியைத் தியானிக்கிறேன். உள் மறைந்துள்ள சித்சக்தியின் உணர்வு வடிவானவர்கள்*

*இந்த நிகர்ப்பா யோகினிகள்.) (139)*

सर्वज्ञासदनोपरि चक्रे विपुले समाकलितगेहाः ।
वन्दे वशिनीमुख्याः शक्तीः सिन्दूररेणुशोणरुचः ॥

ஸர்வஜ்ஞாஸதநோபரி சக்ரே
விபுலே ஸமாகலித கேஹா: ।
வந்தே வசிநீமுக்க்யா:
சக்தீ: ஸிந்தூரரேணுசோண ருச: ॥

*ஸர்வஜ்ஞா சக்தி அமர்ந்த சக்கிரத்தின் மீது விரிவாக உள்ள சக்கிரத்தில் அமர்ந்த வசினீ முதலான சக்திகள் சிந்தூரப்பொடி போன்ற செந்நிறம் கொண்டவர்கள். அவர்களை வணங்குகிறேன். (வசினீ, காமேச்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயினீ, ஸர்வேச்வரீ, கௌலினீ என எட்டுவாக்தேவிகள் இந்த யோகினிகள்.) (140)*

श्रीसर्वरोगहारिणि चक्रेऽस्मिन् त्रिपुरपूर्विकां सिद्धाम् ।
वन्दे रहस्य नाम्ना वेद्याभिः शक्तिभिः सदा सेव्याम् ॥

ஸ்ரீஸர்வரோகஹாரிணி
சக்ரேऽஸ்மின் த்ரிபுரபூர்விகாம் ஸித்த்தாம் ।
வந்தே ரஹஸ்யநாம்நா
வேத்யாபி: சக்திபி: ஸதா ஸேவ்யாம் ॥

*ஸ்ரீஸர்வரோகஹரம் என்ற இந்த சக்கிரத்தில் வசினீ முதலிய ரஹஸ்ய யோகினிகள் என்ற சக்திகளால் எப்போதும் வழிபடப்பெறுகிற த்ரிபுராஸித்த்தா என்ற சக்ரேச்வரியை வணங்குகிறேன். (உள்ளே உணர்கிற சித் சக்திதான் ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண சரீரங்களில் வெளியாவதால் உள்உணர்வு நிலையில் ரஹஸ்யயோகினி. எல்லா நோய்களையும் நீக்கும் சக்கிர மிது.) (141)*

वशिनीगृहोपरिष्टात् विंशतिहस्तोन्नते महापीठे ।
शमयन्तु शत्रुबृन्दं शस्त्राण्यस्त्राणि चादिदंपत्योः ॥

வசிநீக்ருஹோபரிஷ்டாத்
விம்சதிஹஸ்தோந்நதே மஹாபீடே ।
சமயந்து சத்ருப்ருந்தம்
சஸ்த்ராண்யஸ்த்ராணி சாதிதம்பத்யோ: ॥

*வசினீ முதலிய யோகினிகளின் இருப்பிடத்திற்கு மேல் இருபது கைகள் உயரத்திலுள்ள மஹாபீடத்தில் ஆதி தம்பதிகளான காமேச்வரீ-காமேச்வரர்களது சஸ்திரங்களும் அஸ்திரங்களும் சக்தி வடிவில் உள்ளன. அவர்கள் எதிரிக் கூட்டத்தை அடக்கட்டும். (பாணம், வில், பாசம், அங்குசம் என்று நான்கு ஆயுதங்கள். இவர்கள் அதிரஹஸ்யயோகினிகள்.) (142)*

शास्त्रसदनोपरिष्टाद्वलये बलवैरिरत्नसंघटिते ।
कामेश्वरी प्रधानाः कलये देवीः समस्त जनवन्द्याः ॥

சஸ்த்ரஸதநோபரிஷ்டாத்
வலயே பலவைரிரத்ந ஸங்க்கடிதே ।
காமேச்வரீ ப்ரதாநா:
கலயே தேவீ: ஸமஸ்தஜந வந்த்யா: ॥

*ஆயுத சாலைக்கு மேலுள்ள இந்திர நீல ரத்தினங்களாலான வளையத்தில் எல்லா மக்களாலும் வணங்கத்தக்க காமேச்வரீ முதலிய தேவிகளை தியானிக்கிறேன். (மஹா காமேச்வரீ, மஹாவஜ்ரேச்வரீ, மஹாபகமாலினீ, என்ற மூவர்.) (143)*

चक्रेऽत्र सर्वसिद्धिप्रदनामनि सर्वफलदात्री ।
त्रिपुरांबाऽवतु सततं परापररहस्ययोगिनी सेव्या ॥

சக்ரேऽத்ர ஸர்வஸித்த்தி
ப்ரதநாமநி ஸர்வபலதாத்ரீ ।
த்ரிபுராம்பாऽவது ஸததம்
பராபரரஹஸ்யயோகிநீ ஸேவ்யா ॥

*ஸர்வஸித்திப்ரதம் என்ற இந்த சக்கிரத்தில் பராபரரஹஸ்ய யோகினிகளால் வணங்கப்பெறுகிற திரிபுராம்பா எல்லா நற்பலன்களையும் தருபவள். அவள் எப்போதும் காப்பாற்றட்டும். (வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பிரும்மசக்திகளானதால் பராபர ரஹஸ்யயோகினிகள்.) (144)*

कामेश्वरीगृहोपरि वलये विविधमनुसंप्रदायज्ञाः ।
चत्वारो युगनाथाः जयन्तु मित्रेशपूर्वका गुरवः ॥

காமேச்வரீ க்ருஹோபரி
வலயே விவிதமனுஸம்ப்ரதாய ஜ்ஞா: ।
சத்வாரோ யுகநாதா:
ஜயந்து மித்ரேசபூர்வகா குரவ: ॥

*மஹா காமேச்வரீ முதலானவரின் இடத்திற்கு மேல் வளையத்தில் உள்ள பல மந்திர ஸம்பிரதாயமறிந்த மித்ரேசர் முதலான குருக்களான யுகநாதர்கள் விளங்கட்டும். (மித்ரேசர், ஷஷ்டீச நாதர், உட்டீசநாதர், சர்யாநந்த நாதர் என்ற நால்வர் பெளகத்தைச் சார்ந்த குருக்கள். யோகநாதர்களான இவர்களே யுகநாதர்கள்.) (145)*

नाथभवनोपरिष्टात् नानारत्नचयमेदुरे पीठे।
कामेश्याद्या नित्याः कलयन्तु मुदं तिथिस्वरूपिण्यः ॥

நாத பவநோபரிஷ்டாத்
நாநாரத்நசய மேதுரே பீடே ।
காமேச்யாத்யா நித்யா:
கலயந்து முதம் திதிஸ்வரூபிண்ய: ॥

*குருநாதர்களிருக்குமிடத்திற்கு மேல் பலரத்தினங்கள் பதித்த பீடத்தில் திதிகளின் வடிவங்களாக உள்ள காமேச்வரி முதலான நித்யைகள் மகிழ்ச்சி தரட்டும். (காமேச்வரீ பகமாலினீ, நித்யக்லின்னா, பேருண்டா, வந்ஹிவாஸினீ, மஹாவஜ்ரேச்வரீ, சிவதூதீ, த்வரிதா,*

*குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா விஜயா, ஸர்வமங்களா, ஜ்வாலாமாலினீ, சித்ரா என்ற 15 நித்யா தேவிகள் சுக்ல பக்ஷத்து பிரதமை முதல் பௌர்ணமி வரையுள்ள திதிநித்யா தேவிகள். சித்ரா தொடங்கி காமேச்வரி வரை வரிசையை மாற்ற கிருஷ்ண பக்ஷப்பிரதமை முதல் அமாவாஸ்யை வரை திதி நித்யைகள்.) (146)*

**नित्यासदनस्योपरि निर्मलमणिनिवहविरचिते धिष्ण्ये।**
**कुशलं षडङ्गदेव्यः कलयन्त्वस्माकमुत्तरलनेत्राः ॥**

நித்யாஸதநஸ்யோபரி
நிர்மலமணி நிவஹவிரசிதே திஷ்ண்யே ।
குசலம் ஷடங்கதேவ்ய:
கலயந்த்வஸ்மாகம் உத்தரள நேத்ரா: ॥

*திதி நித்யாதேவிகளின் இருப்பிடத்திற்கு மேல் அப்பழுக்கற்ற ரத்னக்குவியல்களாலான மாளிகையில் பரபரக்கின்ற பார்வையுள்ள ஆறு அங்க தேவதைகள் நமக்கு நலம் புரியட்டும். (ஹ்ருதயதேவி, சிரோதேவி, சிகாதேவி, கவசதேவி, நேத்ரதேவி, அஸ்திரதேவி என்று ஆறு சக்திகள் ஷடங்க தேவதைகள்.) (147)*

**सदनस्योपरि तासां सर्वानन्दमयनामके बिन्दौ।**
**पञ्चब्रह्माकारं मञ्चं प्रणमामि मणिगणाकीर्णम् ॥**

ஸதநஸ்யோபரி தாஸாம்
ஸர்வாநந்தமயநாமகே பிந்தௌ ।
பஞ்சப்ரம்ஹாகாரம் மஞ்சம்
ப்ரணமாமி மணிகணாகீர்ணம் ॥

*ஷடங்கதேவிகளின் இருப்பிடத்திற்கு மேல் ஸர்வாநந்த மயம் என்கிற பிந்துவில் ரத்ன வரிசைகள் பதித்த பஞ்சப்ரம்ஹமூர்த்திகளாலான மஞ்சம் உள்ளது. அதனை வணங்குகிறேன். (பிரும்மா, விஷ்ணு, ருத்திரர், ஈச்வரர், ஸதாசிவர் என்ற ஐவர் பஞ்சப்ரம்ஹ மூர்த்திகள்.) (148)*

परितो मणिमञ्चस्य प्रलम्बमाना नियन्त्रिता पाशैः ।
मायामयी यवनिका मम दुरितं हरतु मेचकच्छाया ॥

பரிதோ மணிமஞ்சஸ்ய
ப்ரலம்பமாநா நியந்த்ரிதா பாசை: ।
மாயாமயீ யவநிகா மம
துரிதம் ஹரது மேசகச்சாயா ॥

*இரத்தினக்கட்டிலைச் சுற்றிக் கயிற்றால் கட்டப்பட்டுத் தொங்குகிற மாயா சக்தியாகிற திரை கருநிறமுள்ளது. அது என் பாபத்தை நீக்கட்டும். (திரஸ்கரிணீ-மாயாயவனிகா மாயா ஜவநிகா என்று இதற்குப் பெயர்.) (149)*

मञ्चस्योपरि लम्बन्मल्ली पुन्नागमालिकाभरितम् ।
हरिगोपमयवितानं हरतात् आलस्यं अनिशमस्माकम् ॥

மஞ்சஸ்யோபரி விலஸன்மல்லீ
புந்நாகமாலிகா பரிதம் ।
ஹரிகோபமய விதாநம்
ஹரதாத் ஆலஸ்ய மநிசமஸ்மாகம் ॥

*மஞ்சத்தின் மேல் மல்லி புன்னைகப்பூ மாலைகளால் நிறைந்த தம்பலப்பூச்சிகளாலான மேற்கட்டி நமது சோம்பலை எப்போதும் அகற்றிக் கொண்டிருக்கட்டும். (150)*

पर्यङ्कस्य भजामः पादान् बिम्बाम्बुदेन्दु हेमरुचः ।
अजहरिरुद्रेशमयान् अनलासुरमारुतेशकोणस्थान् ॥

பர்யங்கஸ்ய பஜாம: பாதான்
பிம்பாம்புதேந்து ஹேமருச: ।
அஜஹரிருத்ரேசமயான்
அநலாஸுரமாருதேச கோணஸ்த்தான் ॥

*முறையே கோவைப்பழ (சிகப்பு) நிறமுள்ள பிரும்மா தென்கிழக்கிலும், மேக (கருப்பு) நிறமுள்ள விஷ்ணு*

*தென்மேற்கிலும், சந்திர (வெளுப்பு) நிறமுள்ள ருத்ரன் வடமேற்கிலும், தங்க நிறமுள்ள ஈசுவரன் வடகிழக்கிலும் மஞ்சத்தின் நான்கு கால்களாக உள்ளனர். அவர்களைப் பணிவோம். (151)*

फलकं सदाशिवमयं प्रणौमि सिन्दूररेणुकिरणाभम्।
आरभ्याङ्गेशीनां सदनात्कलितं च रत्नसोपानम्॥

பலகம் ஸதாசிவமயம்
ப்ரணௌமி ஸிந்தூரரேணு கிரணாபம் ।
ஆரப்ப்யாங்கேசீநாம் ஸதநாத்
கலிதம் ச ரத்நஸோபானம் ॥

*குங்குமப்பூத்தூள் போன்று செவ்வொளி படர்ந்த ஸதாசிவராலான மேற்பலகை. ஆறு அங்கதேவதைகளிருப்பிடத்திலிருந்து தொடங்கிய ரத்தினப்படிக் கட்டுகள். இவற்றை வணங்குகிறேன். (152)*

पट्टोपधान-गण्डक चतुष्टय स्फुरित पाटलास्तरणम्।
पर्यङ्कोपरि घटितं पातु चिरं हंसतूल शयनं नः॥

பட்டோபதான கண்டக
சதுஷ்டயஸ்ப்புரிதபாடலா ஸ்தரணம் ।
பர்யங்கோபரி கடிதம்
பாது சிரம் ஹம்ஸதூலசயனம் ந: ॥

*பட்டாலான உறைகொண்ட சாய்வதற்கான நான்கு திண்டுகளுடன் பளபளக்கிற வெண் சிவப்பு நிறம் கொண்ட மேல் விரிப்புடன் அன்னப்பறவையின் இறகுகளால் மென்மை மிக்க படுக்கை, மஞ்சத்தின் மீது வைக்கப்பட்டுள்ளது. இது எம்மை வெகுகாலம் காப்பாற்றட்டும். (153)*

तस्योपरि निवसन्तं तारुण्यश्रीनिषेवितं सततम्।
आवृन्त फुल्लहल्लकमरीचिकापुञ्जमञ्जुलच्छायम्॥

தஸ்யோபரி நிவஸந்தம்
தாருண்ய ஸ்ரீ நிஷேவிதம் ஸததம் ।
ஆவ்ருந்தப்புல்ல ஹல்லக
மரீசிகா புஞ்ச மஞ்ஜுலச் ச்சாயம் ॥

*அதன் மீது காமேச்வரர் அமர்ந்துள்ளார். யௌவனத்தின் அழகு மிளிர்பவர். காம்பு வரை மலர்ந்த செங்கழுநீர் பூவின் ஒளி போன்று மென்மைமிக்க மேனி நிறம் கொண்டவர். (154)*

सिन्दूरशोणवसनं शीतांशुस्तबक चुंबितकिरीटम् ।
कुङ्कुमतिलकमनोहर कुटिलालिकहसित कुमुदबन्धुशिशुम् ॥

ஸிந்தூரசோண வஸநம்
சீதாம்சுஸ்தபக சும்பிதகிரீடம் ।
குங்கும திலக மநோஹர
குடிலாலிக ஹஸித குமுதபந்த்து சிசும் ॥

*சிந்தூரம் போன்று சிவந்த முகமுள்ளவர், சந்திரனது ஒளி முத்தமிடுகிற கிரீடமுள்ளவர், குங்குமப்பூவாலான திலகத்தால் அழகிய இளஞ்சந்திரனைப் பழிக்கின்ற வளைந்த நெற்றியுள்ளவர். (155)*

पूर्णेन्दुबिम्बवदनं फुल्लसरोजातलोचन त्रितयम् ।
तरलापाङ्ग तरङ्गित शफराङ्कन शास्त्रसंप्रदायार्थम् ॥

பூர்ணேந்து பிம்பவதநம்
ப்புல்லஸரோஜாதலோசந த்ரிதயம் ।
தரளாபாங்கதரங்கித
சபராங்கந சாஸ்த்ர ஸம்ப்ரதாயார்த்தம் ॥

*பூர்ணிமைசந்திரன் போன்ற முகமுள்ளவர். மலர்ந்த தாமரைப் பூ போன்று மூன்று கண்களுள்ளவர். சஞ்சலமிக்க கடைக்கண் பார்வையலைகளால் காமசாஸ்திர நுட்பத்தை விளக்குபவர். (156)*

मणिमयकुण्डलपुष्यन्मरीचिकल्लोलमांसलकपोलम्।
विद्रुमसहोदराधरविसृत्वरस्मितकिशोरसञ्चारम्॥

மணிமய குண்டல புஷ்யன்
மரீசி கல்லோல மாம்ஸல கபோலம் ।
வித்ரும ஸஹோதராதர
விஸ்ருக்வர ஸ்மிதகிசோர ஸஞ்சாரம் ॥

*ரத்ன குண்டலங்களின் ஒளியலை பரவிய சதைப்பற்றுமிக்க கன்னமுள்ளவர், பவழத்தோடொத்த உதட்டில் பரவி நிற்கிற புன் சிரிப்புள்ளவர். (157)*

आमोदिकुसुमशेखरं आनील भ्रूलतायुगमनोज्ञम्।
वीटीसौरभवीचीद्विगुणितवक्त्रारविन्दसौरभ्यम्॥

ஆமோதி குஸுமசேகரம்
ஆநீலப்ப்ரூலதா யுகமநோஜ்ஞும் ।
வீடீஸௌரப வீசீத்விகுணித
வக்த்ராரவிந்த ஸௌரப்ப்யம் ॥

*மணமிக்கபூக்களைத் தலையில் சூடியவர். கருத்த இருபுருவங்களால் அழகானவர், தாம்பூலத்தின் மணவீச்சால் தாமரைப் பூ போன்ற முகத்தின் மணம் இருமடங்காகியவர். (158)*

पाशाङ्कुशेक्षुचापप्रसवशरस्फुरितकोमलकराब्जम्।
काश्मीरपङ्किलाङ्गं कामेशं मनसि कुर्महे सततम्॥

பாசாங்கு சேக்ஷு சாப
ப்ரஸவ சரஸ்ப்புரித கோமள கராப்ஜம் ।
காச்மீரபங்கிலாங்கம்
காமேசம் மநஸி குர்மஹே ஸததம் ॥

*பாசம், அங்குசம், கரும்புவில், பூக்களாலான பாணங்கள், இவற்றால் பளபளக்கிற தாமரை போன்ற கைகளுள்ளவர், குங்குமப்பூச்சாந்து உடல் முழுதும்*

பூசியவர், இந்த காமேச்வரரை எப்போதும் மனத்தில் கொள்வோம். *(159)*

तस्याङ्कभुवि निषण्णां तरुणकदम्बप्रसूनकिरणाभाम्।
शीतांशुखण्डचूडां सीमन्तन्यस्त सान्द्रसिन्दूराम्॥

தஸ்யாங்கபுவி நிஷண்ணாம்
தருணகதம்பப்ரஸூந கிரணாபாம் ।
சீதாம்சுக்கண்ட சூடாம்
ஸீமந்தந்யஸ்த ஸாந்த்ர ஸிந்தூராம் ॥

*அவரது மடி மீது காமேச்வரி அமர்ந்துள்ளாள். முதிர்ந்த கடம்பப்பூவின் ஒளி போன்ற மேனி வண்ணம் கொண்டவள். சந்திரனின் பிறைசூடியவள், வகிட்டில் நெய்ப்புமிகக் சிந்தூரம் இட்டுக் கொண்டவள். (160)*

कुंकुमललामभास्वन्निटिलां कुटिलतरचिल्लिकायुगलाम्।
नालीकतुल्यनयनां नासाञ्चल नटितमौक्तिकाभरणाम्॥

குங்குமலலாம பாஸ்வந்நிடிலாம்
குடிலதரசில்லிகாயுகளாம் ।
நாளீகதுல்ய நயநாம் நாஸாஞ்சல
நடிதமௌக்திகாபரணாம் ॥

*குங்குமப்பொட்டால் ஒளி வீசுகிற நெற்றியுள்ளவள், மிகவும் வளைந்த இரு புருவங்களுள்ளவள், தாமரை இதழ் போன்ற கண்கள் உள்ளவள். மூக்கின் நுனியில் ஆடிக்கொண்டிருக்கிற முத்தணி கொண்டவள். (161)*

अङ्कुरितमन्दहासां अरुणाधरकान्तिविजितबिम्बाभाम्।
कस्तूरीमकरीयुतकपोलसंक्रान्तकनकताटङ्काम्॥

அங்குரித மந்த ஹாஸாம்
அருணாதர காந்தி விஜித பிம்பாபாம் ।
கஸ்தூரீ மகரீயுத
கபோலஸங்க்ராந்த கநக தாடங்காம் ॥

*முளைவிடும் புன் சிரிப்புள்ளவள், சிவந்த உதட்டழகால் கோவைப்பழத்தை வென்றவள், கஸ்தூரிப் பொட்டிட்ட கன்னத்தில் தங்கக்காதோலையின் ஒளிபரவி இருப்பவள். (162)*

कर्पूरसान्द्रवीटी कवलितवदनारविन्द कमनीयाम्।
कम्बुसहोदरकण्ठप्रलंब मानाच्छमौक्तिकालापाम्॥

கர்பூரஸாந்த்ரவீடீ கவலித
வதநாரவிந்த கமநீயாம் ।
கம்புஸஹோதரகண்ட்ட
ப்ரலம்பமாநாச்ச மௌக்திகாலாபாம் ॥

*கற்பூரமணமிக்க வீடா (தாம்பூலச்சுருள்) வின் செம்மையில் முக அழகு குன்றியவள், சங்கை ஒத்த கழுத்தில் தொங்குகிற அப்பழுக்கற்ற முத்தாரம் பூண்டவள். (163)*

कल्हारदामकोमलभुजयुगलस्फुरितरत्नकेयूराम्।
करपद्ममूल विलसत्काञ्चनमयकटकवलयसन्दोहाम्॥

கல்ஹார தாமகோமள
புஜயுகல ஸ்ப்புரிதரத்ந கேயூராம் ।
கரபத்மமூலவிலஸத்
காஞ்சநமய கடகவலயஸந்தோஹாம் ॥

*தாமரைத் தண்டு போன்று மென்மை மிக்க இருதோள்களில் ரத்தின கேயூரம் பூண்டவள், மணிக்கட்டில் தங்க வளைகளும் காப்புகளும் பூண்டவள். (164)*

पाणिचतुष्टयविलसत्पाशाङ्कुशपुण्ड्रचापपुष्पास्त्राम्।
कूलंकषकुचशिखरां कुंकुमकर्दमितरत्नकूर्पासाम्॥

பாணி சதுஷ்டய விலஸத்
பாசாங்குச புண்ட்ர சாபபுஷ்பாஸ்த்ராம் ।
கூலங்கஷகுசசிகராம்
குங்குமகர்தமித ரத்ன கூர்பாஸாம் ॥

*நான்கு கைகளிலும் பாசமும் அங்குசமும் கரும்பு வில்லும் புஷ்பபாணங்களும் ஏந்தியவள், ஒன்றோடொன்று உரைகிற மார்பகங்களுள்ளவள், குங்குமப்பூச்சாந்து பூசிய மார்புக்கச்சு கொண்டவள். (165)*

अणुदायादवलग्नां अंबुदशोभासनाभिरोमलताम्।
माणिक्य खचित काञ्चीमरीचिकाक्रान्तमांसलनितम्बाम्॥

அணுதாயாத வலக்நாம்
அம்புத சோபாஸநாபி ரோமலதாம் ।
மாணிக்ய கசிதகாஞ்சீ
மரீசிகாக்ராந்த மாம்ஸல நிதம்பாம் ॥

*அணுபோன்று புலப்படாத இடையுள்ளவள், மேகம் போன்ற நிறமுள்ள உரோம வரிசையுள்ளவள், மாணிக்கத்தாலான ஒட்டியாண ஒளிபரவிய சதைப்பற்று மிக்க இடுப்புள்ளவள். (166)*

करभोरुकाण्डयुगलां जंघाजितकामजैत्र तूणीराम्।
प्रपदपरिभूतकूर्मां पल्लवसच्छायपदयुगमनोज्ञाम्॥

கரபோருகாண்டயுகளாம்
ஜங்க்காஜித காமஜைத்ர தூணீராம் ।
ப்ரபதபரிபூதகூர்மாம்
பல்லவஸச்சாயபதயுக மநோஜ்ஞாம் ॥

*துதிக்கை போன்ற நீண்ட துடைகள் உள்ளவள், மன்மதனின் அம்புறாத் தூணியை வெல்கிற முழங்காலுள்ளவள், ஆமையை வெல்கிற புறங்கால்கள் உள்ளவள், துளிர்போன்ற சிவந்த திருவடியால் அழகானவள். (167)*

कमलभवकञ्जलोचन किरीटरत्नांशुरञ्जितपदाब्जाम्।
उन्मस्तकानुकंपां उत्तरलापाङ्गपोषितानङ्गाम्॥

கமலபவ கஞ்ஜலோசந
கிரீடரத்னாம்சு ரஞ்ஜிதபதாப்ஜாம் ।

உந்மஸ்தகானுகம்பாம்

உத்தரளாபாங்கபோஷிதாநங்காம் ॥

*பிரும்மா விஷ்ணு இவர்களின் கிரீடங்களின் ஒளியால் சிவந்த திருவடியுள்ளவள், பரிவுமிக்கவள், சஞ்சலமிக்க கடைக்கண் பார்வையால் மன்மதனைப் போஷிப்பவள். (168)*

आदिमरसावलंबां अनिदंप्रथमोक्तिवल्लरीकलिकाम्।
आब्रह्मकीटजननीं अन्तः कलयामि सुन्दरीमनिशम् ।।

ஆதிமரஸாவலம்பாம்

அநிதம்ப்ரதமோக்தி வல்லரீ கலிகாம் ।

ஆப்ரம்ஹ கீட ஜநநீம்

அந்த: கலயாமி ஸுந்தரீ மநிசம் ॥

*முதல் காவியரஸமாகிற சிருங்காரச்சுவைக்கு பிடிப்பானவள். மிகப்பழைய சொல்வடிவான வேதக்கொடியின் மொட்டு, பிரும்மா முதல் புழுவரை அனைத்திற்கும் தாய், அந்த ஸுந்தரியை உள்ளத்தில் உருவகப்படுத்துகிறேன். (ஸுந்தரீ, லலிதா, காமேச்வரீ, திரிபுரஸுந்தரீ என்றவாறு பல பெயர்கள் கொண்டவள் தேவி.) (169)*

कस्तु क्षितौ पटीयान्वस्तु स्तोतुं शिवाङ्कवास्तव्यम्।
अस्तु चिरन्तनसुकृतैः प्रस्तुतकाम्याय तन्मम पुरस्तात्।।

கஸ்து க்ஷிதெள படீயான்

வஸ்து ஸ்தோதும் சிவாங்க வாஸ்தவ்யம் ।

அஸ்து சிரந்தநஸுக்ருதை:

ப்ரஸ்துத காம்யாய தன் மம புரஸ்தாத் ॥

*சிவனது மடியில் இருக்கிற அந்தப் பொருளைத் துதிக்க வல்லவன் எவன் ? பல்லாண்டு காலமாகச் சேமித்த புண்யங்களால் தற்போதைய விருப்பத்தை நிறைவேற்ற அது என் முன்தோன்றட்டும். (170)*

प्रभुसंमितोक्तिगम्यं परमशिवोत्संग तुङ्गपर्यङ्कम्।
तेजः किञ्चन दिव्यं पुरतो मे भवतु पुण्ड्रकोदण्डम् ।।

ப்ரபுஸம்மிதோக்திகம்யம்
பரமசிவோத்ஸங்கதுங்க பர்யங்கம் ।
தேஜ: கிஞ்சந திவ்யம்
புரதோ மே பவது புண்ட்ரகோதண்டம் ॥

*பேராளுனரின் சொல் போன்று மாற்றிராத வேத வசனங்களால் உணரத்தக்கதும், பரமசிவனது மடியாகிற உயரமிக்க ஆஸனம் கொண்டதும், கரும்புவில் கொண்டதுமான ஒரு தெய்வ ஒளி என்முன் தோன்றட்டும். (171)*

मधुरिमभरितशरासं मकरन्दस्पन्दि मार्गणोदारम्।
कैरविणीविटचूडं कैवल्यायास्तु किञ्चन महो नः ।।

மதுரிமபரிதசராஸம்,
மகரந்தஸ்பந்தி மார்கணோதாரம் ।
கைரவிணீவிடசூடம்
கைவல்யாயாஸ்து கிஞ்சந மஹோ ந: ॥

*இனிமை நிறைந்த வில்லுள்ளது, தேன் சொட்டுகிற அம்பால் பெருமை பெற்றது. சந்திரனைச் சூடியது. அந்த ஒரு பேரொளி முக்தி தரட்டும். (172)*

अक्षुद्रमिक्षुचापं परोक्षमवलग्नसीमनि त्र्यक्षम्।
क्षपयतु मे क्षेमेतरं उक्षरथप्रेमपक्ष्मलं तेजः ।।

அக்ஷுத்ரமிக்ஷுசாபம்
பரோக்ஷமவலக்நஸீமநி த்ரயக்ஷம் ।
க்ஷபயது மே க்ஷேமேதரம்
உக்ஷரதப்ரேம பக்ஷ்மலம் தேஜ: ॥

*அற்பமற்றது, கரும்பு வில்லுள்ளது, இடை எல்லையில் காணப்பெறாதது, முக்கண்களுள்ளது, காளை*

வாகனம் கொண்டவரின் அன்புக்குரிய அந்தப் பேரொளி எனக்கு நலனல்லாததை அழிக்கட்டும். *(173)*

भृंगरुचिसंगरकरापाङ्गं शृङ्गारतुङ्ग मरुणाङ्गम्।
मङ्गलमभङ्गुरं मे घटयतु गङ्गाधराङ्गसङ्गि महः ॥

ப்ப்ருங்க ருசிஸங்கரகரா
பாங்கம் ச்ருங்காரதுங்கமருணாங்கம் ।
மங்களமபங்குரம் மே
க்கடயது கங்காதராங்கஸங்கி மஹ: ॥

*வண்டின் நிறத்தோடு போட்டியிடுகிற கடைக்கண் உள்ளது. சிருங்காரத்தின் உச்சநிலை. செந்நிறமேனியுள்ளது, கங்கையைத் தரித்தவரின் உடலுடன் ஒட்டியது. அந்தப் பேரொளி சிதறுத மங்களத்தைக் கூடச் செய்யட்டும். (174)*

प्रपदजितकूर्ममूर्मिल करुणं भर्मरुचिनिर्मथनदेहम्।
श्रितवर्म मर्म शंभोः किञ्चन नर्म मम शर्म निर्मातु॥

ப்ரபதஜித கூர்மம் ஊர்மில
கருணம் பர்மருசி நிர்மதன தேஹம் ।
ச்ரிதவர்ம மர்ம சம்ப்போ:
கிஞ்சந நர்ம மம சர்ம நிர்மாது ॥

*ஆமை முதுகை வெல்கிற புறங்காலுள்ளது. அலைமோதுகிற கருணையுள்ளது, தங்க ஒளியைக் குலைக்கிற மேனிவண்ணம் கொண்டது, கவசமணிந்தது, சிவனது ஏதோ ஒரு ரஹஸ்யமானது, அது எனக்கு இதம் புரியட்டும். (175)*

कालकुरुलालि कालिमकन्दल विजितालि विधृतमणि
वालि।
मिलतु हृदि पुलिनजघनं बहुलितगलगरलकेलि किमपि
महः ॥

காலகுருலாலிகாலிம கந்தல
விஜிதாலி வித்ருத மணிவாலி ।
மிலது ஹ்ருதி புலிநஜகநம்
பஹுலித கலகரலகேளி கிமபி மஹ: ॥

*கருத்த சுருண்ட முன்னுச்சி கேசத்தின் கருமையால் போட்டியிட்டு வண்டை வென்றது. ரத்னக் காதணி பூண்டது. மேடிட்ட அடி வயிறு கொண்டது. கழுத்தில் விஷம் கொண்ட சிவனுடன் அதிகம் விளையாடுவது, அத்தகைய பேரொளி என் இதயத்தில் கூடியிருக்கட்டும். (176)*

कुंकुमतिलकितफाला कुरुविन्दच्छायपाटलदुकूला ।
करुणापयोधिवेला काचन चित्ते चकास्तु मे लीला ॥

குங்கும திலகிதபாலா
குருவிந்தச் சாய பாடலதுகூலா ।
கருணாபயோதிவேலா
காசந சித்தே சகாஸ்து மே லீலா ॥

*நெற்றியில் குங்குமத்திலகமிட்டவள், மாணிக்க நிறமுள்ள செம்பட்டுடுத்தியவள். கருணைக் கடலின் எல்லை, அத்தகைய ஒரு லீலைவடிவம் என் சித்தத்தில் துலங்கட்டும். (177)*

पुष्पन्धयरुचिवेण्यः पुलिनाभोगत्रपाकरश्रोण्यः ।
जीयासुरिक्षुपाण्यः काञ्चन कामारिकेलि साक्षिण्यः ॥

புஷ்பந்த்த்ய ருசிவேண்ய:
புலிநாபோக த்ரபாகரச்ரோண்ய: ।
ஜீயாஸுரிக்ஷுபாண்ய:
காஞ்சந காமாரிகேலி ஸாக்ஷிண்ய: ॥

*வண்டு போன்ற கருங் கூந்தலுள்ளவர்கள், மணல் திட்டின் பரப்பை வெட்கிக்குனியச் செய்கிற இடுப்பின் பின்புற முள்ளவர்கள், கரும்பைக் கையில்*

*கொண்டவர்கள், காமனின் எதிரியான சிவனது காமகேளிக்கைக்கு ஸாக்ஷியானவர்கள். இவர்கள் வெற்றிபெறட்டும். (178)*

तपनीयांशुकभांसि द्राक्षामाधुर्यनास्तिकवचांसि।
कतिचन शुचं महांसि क्षपयन्तु कपालितोषितमनांसि॥

தபநீயாம்சுக பாம்ஸி
த்ராக்ஷா மாதுர்ய நாஸ்திக வசாம்ஸி ।
கதிசந சுசம் மஹாம்ஸி
க்ஷபயந்து கபாலி தோஷிதமநாம்ஸி ॥

*தங்கம் போன்று பளபளக்கிற மேலாடை கொண்டவை, திராக்ஷையின் இனிமையை மறுக்கிற சொல்லினிமை கொண்டவை, கபாலம் ஏந்திய சிவனின் மனத்தை மகிழ்விப்பவை இத்தகைய ஏதோ சிலபேரொளிகள் துயரத்தைக் களையட்டும். (179)*

असितकचमायताक्षं कुसुमशरं कूलमुद्वहकृपार्द्रम्।
आदिमरसाधिदैवतमन्तः कलये हराङ्कवासि महः॥

அஸித கசமாயதாக்ஷம்
குஸுமசரம் கூலமுத்வஹக்ருபார்த்ரம் ।
ஆதிம ரஸாதிதைவதம்
அந்த: கலயே ஹராங்கவாஸி மஹ: ॥

*கரிய கூந்தலுள்ளது. நீண்டவிழி உள்ளது. பூவாலான பாணமுள்ளது. கரை கடந்த கருணையால் நனைந்தது, காவியரஸங்களில் முதலான சிருங்காரத்தின் தேவதை, சிவனது மடியில் குடியிருப்பது. அந்தப் பேரொளியை மனத்தில் கொள்கிறேன். (180)*

कर्णोपान्ततरङ्गितकटाक्षनिष्यन्दि कण्ठदघ्नकृपाम्।
कामेश्वराङ्कनिलयां कामपि विद्यां पुरातनीं कलये॥

கர்ணோபாந்த தரங்கித
கடாக்ஷ நிஸ்யந்தி கண்ட்டதக்ந க்ருபாம் ।

காமேச்வராங்கநிலயாம்

காமபி வித்யாம் புராதனீம் கலயே ॥

*காதுகளின் அருகாமையில் அலைமோதுகிற கடைக்கண் பார்வையில் பெருகுகிற கழுத்தளவு கிருபை கொண்டவள், காமேசுவரரின் மடியில் இருப்பவள், மிகப் பழைய ஸ்ரீவித்யை. இவளை வணங்குகிறேன். (181)*

अरविन्दकान्त्यरुन्तुद विलोचनद्वन्द्व सुन्दरमुखेन्दु।
छन्दः कन्दलमन्दिरं अन्तःपुरमैन्दुशेखरं वन्दे ॥

அரவிந்த காந்த்யருந்துத

விலோசநத்வந்த்வஸுந்தர முகேந்து ।

ச்சந்த: கந்தள மந்திரம்

அந்த:புரமைந்து சேகரம் வந்தே ॥

*தாமரையின் அழகை வாடச் செய்கிற இரு கண்களால் அழகிய சந்திரன் போன்ற முகமுள்ளது. பிறை சூடியான சிவனது அந்த:புரம் (தேவி) வேதத்தின் குருத்தின் (ஸாரத்தின்) இருப்பிடம். அதனை வணங்குகிறேன். (182)*

बिंबिनिकुरुम्बडम्बर विडम्बकच्छायं अंबर वलग्नम्।
कम्बुगलं अंबुदकचं बिम्बोकं किमपि चुम्बतु मनो मे ॥

பிம்பி நிகுரும்ப டம்பர

விடம்பகச்சாயம் அம்பர வலக்நம் ।

கம்புகளம் அம்புதகசம்

பிம்போகம் கமபி சும்பது மநோ மே ॥

*கோவைப்பழக்குவியலின் படாடோபத்தைப் பறைசாற்றுகிற மேனி நிறம் கொண்டது, ஆகாசம் போல் புலப்படாத இடையுள்ளது. சங்கு போன்ற கழுத்துள்ளது, மேகம் போன்ற கூந்தலுள்ளது, அத்தகைய பெருமிதத்தை என் மனம் முத்த மிடட்டும். (183)*

कमपि कमनीयरूपं कलयाम्यन्तः कदम्बकुसुमाढ्यम्।
चम्पकरुचिरसुवेषैः संपादित कान्त्यलङ्कृत दिगन्तम् ॥

கமபி கமநீயரூபம்
கலயாம்யந்த: கதம்பகுஸுமாட்யம் ।
ஸம்பகருசிரஸுவேஷை:
ஸம்பாதித காந்த்யலங்க்ருத திகந்தம் ॥

*ஓர் அழகியவடிவம். கடம்புப்பூ அணிந்தது. சம்பகநிறம் கொண்ட ஆடையணி முதலிய வற்றுலானமேனியொளியால் திசைகளின் எல்லை வரை அழகுபெறச் செய்தது. அதனை உள்ளத்தில் உருவகப்படுத்துகிறேன். (184)*

शंपारुचिभरगर्हा संपादककान्तिकवचितदिगन्तम्।
सिद्धान्तं निगमानां शुद्धान्तं किमपि शूलिनः कलये ॥

ஸம்பாருசிபரகர்ஹா
ஸம்பாதககாந்திகவசித திகந்தம் ।
ஸித்த்தாந்தம் நிகமாநாம்
சுத்த்தாந்தம் கிமபி சூலிந: கலயே ॥

*மின்னலின் ஒளிக்குவியலை அவமதிக்கிற தன்மேனி ஒளியால் திசையின் எல்லைவரை மறைத்தது. வேதங்களின்முடிந்த முடிவுப்பொருள். சூலமேந்திய சிவனது அந்தப்புரம்-அதனைத் தியானிக்கிறேன். (185)*

उद्यद्दिनकर शोणान् उत्पलबन्धुस्तनन्धायपीडान्।
करकलितपुण्ड्रचापान् कलये कानपि कपर्दिनः प्राणान् ॥

உத்யத்திநகர சோணான்
உத்பலபந்த்து ஸ்தனந்த்தயாபீடான் ।
கரகலித புண்ட்ரசாபான்
கலயே காநபி கபர்திந: ப்ராணான் ॥

*தேவியாகிய சிவனது பிராணன்கள் உதிக்கிற சூரியனைப் போன்று சிவந்தவை. அல்லியின் உறவினரான இளஞ்சந்திரனைச் சூடியவை. கரும்பு வில்லைக் கையில் ஏந்தியவை. அவற்றைத் தியானிக்கிறேன். (186)*

रशनालसज्जघनया रसनाजीवातुचापभासुरया।
घ्राणायुष्कर शरया घ्रातं चित्तं कयाऽपि वासनया॥

ரசநாலஸஜ்ஜகநயா
ரஸநாஜீவாது சாபபாஸுரயா ।
க்க்ராணாயுஷ்கர சரயா
க்க்ராதம் சித்தம் கயாऽபி வாஸநயா ॥

*ஒட்டியாணம் அணிந்த இடுப்புள்ளது. நாக்கிற்கு உயிரூட்டுகிற வில்லால் ஒளி மிக்கது. மூக்கிற்கு ஆயுளைத் தருகிற பாணம் கொண்டது. அத்தகைய நறுமணத்தால் என் மனம் கவரப்பட்டது. (187)*

सरसिजसहृयुध्वदृशा शंपालतिकासनाभिविग्रहया।
भासा कयाऽपि चेतो नासामणि शोभिवदनया भरितम्॥

ஸரஸிஜஸஹயுத்த்வத்ருசா
சம்பாலதிகா ஸநாபி விக்ரஹயா ।
ப்பாஸா கயாऽபி சேதோ
நாஸாமணிசோபிவதநயா பரிதம் ॥

*தாமரையுடன் போட்டியிடுகிற கண்களுள்ளது. மின்னல் கொடிபோன்ற வடிவம் கொண்டது, ரத்தின மூக்குத்தியால் அழகுற்ற முகமுள்ளது. அத்தகைய பேரொளி ஒன்றால் என் மனம் நிரப்பப்பெற்றது. (188)*

नवयावकाभसिचयान्वितया गजयानया दयापरया।
धृतयामिनीशकलया धिया कयाऽपि क्षतामया हि वयम्॥

நவயாவகாப ஸிசயாந்விதயா
கஜயாநயா தயாபரயா ।
த்த்ருதயாமிநீசகலயா தியா
கயாऽபி க்ஷதாமயா ஹி வயம் ॥

*செம்பஞ்சுக்குழம்பு போன்று சிவந்த ஆடையணிந்த அவள் ஒரு புத்தி சக்தி. யானை போன்ற நடையுள்ளவள், பரிவு மிக்கவள், பிறை சூடியவள், அவளால் நோயற்றிருக்கிறோம். (189)*

अलं अकुसुमबाणैः अबिम्बशोणैः अपुण्ड्रकोदण्डैः ।
अकुमुदबान्धवचूडैः अन्यैरिह जगति दैवतंमन्यैः ॥

அலம் அகுஸுமபாணை:
அபிம்பசோணை: அபுண்ட்ரகோதண்டை: ।
அகுமுத பாந்த்தவசூடை:
அன்யைரிஹ ஜகதி தைவதம்மந்யை: ॥

*தன்னையும் தெய்வமென நினைத்துக் கொண்டிருக்கிற தேவர்கள் பலர். அவர்கள் பூவாலான பாணம் ஏந்தியவரல்ல. கோவைப்பழம் போல் சிவந்தவரல்ல. கரும்புவில்லேந்தியவரல்ல. சந்திரனைச் சூடியவரல்ல. அவர்களால் ஆவதொன்றுமில்லை. (190)*

कुवलयसदृक्षनयनैः कुलगिरिकूटस्थबन्धुकुचभारैः ।
करुणास्पन्दिकटाक्षैः कवचित चित्तोऽस्मि कतिपयैः
कुतुकैः ॥

குவலய ஸத்ருக்ஷ நயனை:
குலகிரி கூடஸ்த்த பந்த்து குச பாரை: ।
கருணாஸ்பந்தி கடாக்ஷை:
கவசித சித்தோऽஸ்மி கதிபயை: குதுகை: ॥

*தேவி குறுகுறுப்புகளின் உருவகம். அவை அல்லிப் பூ போன்ற கண்களுள்ளவை, குலபர்வதங்களின்*

மூதாதையான மேருவைப் போன்ற மார்பகங்கள் உள்ளவை. கருணை ஒழுகும் கடைக்கண் பார்வையுள்ளவை. அவற்றால் என் உள்ளம் கவசப்பாதுகாப்புபெற்றுள்ளது. (191)

नतजनसुलभाय नमो नालीकसनाभिलोचनाय नमः।
नन्दितगिरिशाय नमो महसे नवनीपपाटलाय नमः॥

நத ஜநஸுலபாய நமோ
 நாளீக ஸநாபிலோசநாய நம: ।
நந்தித கிரிசாய நமோ
 மஹஸே நவநீபபாடலாய நம: ॥

தேவி ஒரு பேரொளி. வணங்கியவருக்கு எளிதில் கிட்டிய அதற்கு நமஸ்காரம். தாமரை போன்ற கண்களுள்ள அதற்கு நமஸ்காரம். சிவனை மகிழ்வித்த அதற்கு நமஸ்காரம். புதிய கடம்பு போன்று சிவந்த அதற்கு நமஸ்காரம். (192)

कादम्ब कुसुमधाम्ने कायच्छायाकणायितार्यम्णे।
सीम्ने चिरन्तनगिरां भूम्ने कस्मैचिदादधे प्रणतिम्॥

காதம்ப குஸுமதாம்நே
 காயச்சாயா கணாயிதார்யம்ணே ।
ஸீம்நே சிரந்தநகிராம் பூம்நே
 கஸ்மைசிதாததே ப்ரணதிம் ॥

தேவி ஒரு எல்லாமான பெரும் பொருள். கடம்பப்பூ போன்ற வண்ணம் கொண்டது. மேனியொளியில் சூரிய ஒளியைத் துளியாக ஆக்கியது. வேதங்களின் எல்லை. அதற்கு வணக்கம் செய்கிறேன். (193)

कुटिलकबरीभरेभ्यः कुङ्कुमसब्रह्मचारिकिरणेभ्यः।
कूलङ्कषस्तनेभ्यः कुर्मः प्रणतिं कुलाद्रिकुतुकेभ्यः॥

குடில கபரீ பரேப்ப்ய:
 குங்கும ஸப்ரம்ஹசாரிகிரணேப்ப்ய: ।

கூலங்கஷஸ்தநேப்ப்ய:
குர்ம: ப்ரணதிம் குலாத்ரி குதுகேப்ப்ய: ॥

*சுருண்ட கூந்தலுள்ளவை, குங்குமப்பூ போன்ற மேனி ஒளி கொண்டவை, ஒன்றோடொன்று உராய்கிற மார்பகங்கள் கொண்டவை. குலபர்வதமான இமயத்தின் கொண்டாட்டமானவை. அவற்றை வணங்குகிறோம். (194)*

कोकनद शोणचरणात् कोमलकुरुलालि विजित शैवालात्।
उत्पलसगन्धिनयनात् उररीकुर्मो न देवतामन्याम् ॥

கோகநத சோண சரணாத்
கோமல குருலாலி விஜித சைவாலாத் ।
உத்பலஸகந்த்தி நயனாத்
உரரீகுர்மோ ந தேவதா மந்யாம் ॥

*எம் தைவம் செங்கழுநீர்ப் பூ போன்ற சிவந்த திருவடியுள்ளது. மென்மையுடன் சுருண்ட கூந்தலால் பாசியை வென்றது. அல்லி போன்ற அழகுமிக்க கண்களுள்ளது. அதனைத் தவிர வேறு தைவத்தை ஏற்கமாட்டோம். (195)*

आपाटलाधराणां आनीलस्निग्धबर्बरकचानाम्।
आम्नायजीवनानां आकूतानां हरस्य दासोऽस्मि ॥

ஆபாடலாதராணாம்
ஆநீலஸ்நிக்த்த பர்பரகசாநாம் ।
ஆம்நாய ஜீவநாநாம்
ஆகூதாநாம் ஹரஸ்ய தாஸோऽஸ்மி ॥

*தேவி சிவனது உள்ளத்து உணர்வுகள் வடிவானவள். வெண் சிகப்பு நிறமுள்ள உதடுடையவையும் கருத்து நெய்ப்புடன் சுருண்ட கூந்தலுடையவையும் வேதங்களின் உயிரானவையுமான அந்த உணர்வுகளுக்கு அடிமையாக உள்ளேன். (196)*

पुंखितविलासहास स्फुरितासु पुराहिताङ्क निलयासु।
मग्नं मनो मदीयं कास्वपि कामारिजीवनाडीषु॥

புங்க்கித விலாஸஹாஸ
ஸ்ப்புரிதாஸு புராஹிதாங்க நிலயாஸு ।
மக்னம் மநோ மதீயம்
காஸ்வபி காமாரிஜீவநாடீஷு ॥

*தேவி சிவனது ஜீவநாடிகளாயிருப்பவள். அடுக்கடுக்காகப் பொங்கி எழுகிற உல்லாஸத்திலும் புன் சிரிப்பிலும் வெளிப்படுகிறவையும் திரிபுரங்களின் எதிரியான சிவனதுமடி மீது இருப்பவையுமான அந்த ஜீவநாடிகளில் என்மனம் ஆழ்ந்துள்ளது. (197)*

ललिता पातु शिरो मे ललाटमंबा च मधुमतीरूपा।
भ्रूयुग्मं च भवानी पुष्पशरा पातु लोचनद्वन्द्वम्॥

லலிதா பாது சிரோ மே
லலாடமம்பா ச மதுமதீரூபா ।
ப்ப்ரூயுக்மம் ச பவாநீ
புஷ்பசரா பாது லோசந த்வந்த்வம் ॥

*லலிதா என் தலையைக் காக்கட்டும். மதுமதீ என் நெற்றியைக் காக்கட்டும். பவானீ இருபுருவங்களையும் பூக்களைப்பாணமாகக் கொண்டவள் இருகண்களையும் காக்கட்டும். (லலிதா-மின்னும் அழகி, அழகூட்டுபவள். விளையாட்டும் மிடுக்கும் மென்மையும் மழமழப்பும் புதுமையும் கொண்டது அந்த அழகு. பிரயாகையில் பீடசக்தி. பவானீ உலகை வாழவைக்கிற சிவனை வாழவைப்பவள். பவரின் சக்தி. ஸ்தானேசுவரத்தின் பீடசக்தி. மதுமதீ - மதுமதீ எனும் பிரும்ஹவித்யை, மதுமதீ எனும் யோகப்படி, மதுமதீ எனும் நதி, தேனை விரும்பி ஏற்பவள்). (198)*

पायान्नासां बाला, सुभगा दन्तांश्च, सुन्दरी जिह्वाम्।
अधरोष्ठमादिशक्तिः चक्रेशी पातु मे चिरं चिबुकम्॥

பாயாந் நாஸாம் பாலா

ஸுபகா தந்தாம்ச்ச ஸுந்தரீ ஜிஹ்வாம் ।

அதரோஷ்ட்டமாதி சக்தி:

சக்ரேசீ பாது மே சிரம் சிபுகம் ॥

*மூக்கை பாலாவும் பற்களை ஸுபகாவும் நாக்கை ஸுந்தரியும் கீழ் உதட்டை ஆதிசக்தியும் முகவாயை சக்ரேசியும் காக்கட்டும். (பாலா காமேச்வரி காமேசுவரர்களின் அன்பில் தோன்றிய குட்டிலலிதை. ஸுபகா - செல்வம், பெருமை, வீர்யம், ஆண்மை, விடாமுயற்சி, புகழ், அழகு, பெருமனம் முதலிய பக சக்திகள் நன்கு அமைந்தவள். இவள் அருளால் பெறுவது ஸௌபாக்யம் என்ற இந்த தன்மைகள். ஆதிசக்தி:- பிரும்ஹத்திடம் அடங்கித் தனித்தன்மை பெறுதிருந்த சக்தி, ஸங்கல்பவடிவில் தனிமை பெற்றவள்) (199)*

कामेश्वरी च कर्णौ कामाक्षी पातु गण्डयोर्युगलम्।

शृङ्गारनायिकाऽव्यात् वदनं सिंहासनेश्वरी च गलम्॥

காமேச்வரீ ச கர்ணௌ

காமாக்ஷீ பாது கண்டயோர்யுகலம் ।

ச்ருங்கார நாயிகாऽவ்யாத்

வதநம் ஸிம்ஹாஸநேச்வரீ ச களம் ॥

*காதுகளைக் காமேச்வரியும் கன்னங்களைக் காமாக்ஷியும் முகத்தை சிருங்காரநாயிகாவும் கழுத்தை ஸிம்ஹாஸ நேச்வரியும் காக்கட்டும். (200)*

स्कन्दप्रसूश्च पातु स्कन्धौ बाहू च पाटलाङ्गी मे।

पाणी च पद्मनिलया पायादनिशं नखावलीर्विजया॥

ஸ்கந்த ப்ரஸூச் ச பாது

ஸ்கந்தௌ பாஹூ ச பாடலாங்கீ மே ।

பாணீ ச பத்மநிலயா

பாயாதநிசம் நகாவலீர் விஜயா ॥

*தோள்களை கந்தனின் தாயும், கைகளை செந்நிற மேனியுள்ளவளும் கைகளைத் தாமரையில் வசிப்பவளும் நகவரிசையை விஜயாவும் எபபோதும் காக்கட்டும். (விஜயா-நான் என்ற உள்ளுணர்வானவள். எதிரி தோற்காமல் எதிரியையும் சிறப்புறச் செய்து வெல்பவள்.) (201)*

**कोदण्डिनी च वक्षः कुक्षिं चाव्यात्कुलाचलतनूजा।**
**कल्याणी च वलग्नं कटिं च पायात्कलाधरशिखण्डा।।**

கோதண்டிநீ ச வக்ஷ:
குக்ஷிம் சாவ்யாத் குலாசலதநூஜா ।
கல்யாணீ ச வலக்நம்
கடிம் ச பாயாத் கலாதரசிகண்டா ॥

*மார்பை வில்லேந்தியவளும் வயிற்றை குலபர்வதமான ஹிமவானின் மகளும் இடையைக் கல்யாணியும் இடுப்பைச் சந்திரனைச் சூடியவளும் காக்கட்டும். (கல்யாணீ மங்களமானதைப் பேசுபவள். மங்கள வடிவினள்.) (202)*

**ऊरुद्वयं च पायादुमा मृडानी च जानुनी रक्षेत्।**
**जंघे च षोडशी मे पायात्पादौ च पाशसृणिहस्ता।।**

ஊருத்வயம் ச பாயாதுமா
ம்ருடாணீ ச ஜாநுநீ ரக்ஷேத் ।
ஜங்க்கே ச ஷோடசீ மே
பாயாத் பாதௌ ச பாசஸ்ருணிஹஸ்தா ॥

*இரு துடைகளை உமாவும் முழங்கால்களை மிருடானியும், கணுக்கால்களை ஷோடசியும் கால்களைப் பாசமும் அங்குசமும் கைகளில் கொண்டவளும் காக்கட்டும். உமா- சிவனது சக்தி. உ-சிவன். சிவனை அடையாளம் காட்டுபவள். சிவன் நிறமற்றவர். அர்த்தநாரீயாகிச் சிவனிடம் தன் செம்மையைப் பரப்பி அடையாளம் காட்டுகிறுள். சிவனின் மடியிலமர்ந்த*

*போதும் இதே. தேவீ ப்ரணவத்தின் வடிவம். உம். அ. என்ற உருமாற்றம். உமா என்பது யோக நிலையில் சித்தம் அடங்கி முதிர்ந்த இச்சா சக்தியாகும். மிருடாணீ, காப்பில் ஈடுபட்ட சிவன் ம்ருடர். அவரது சக்தி. (203)*

प्रातः पातु परा मां मध्याह्ने पातु मणिगृहाधीशा।
शर्वाण्यवतु च सायं पायाद्रात्रौ च भैरवी साक्षात्॥

ப்ராத: பாது பரா மாம்
மத்யாந்ஹே பாது மணிக்ருஹாதீசா ।
சர்வாண்யவது ச ஸாயம்
பாயாத் ராத்ரௌ ச பைரவீ ஸாக்ஷாத் ॥

*காலையில் பராவும் நடுப்பகலில் சிந்தாமணி கிருஹத்தின் தலைவியும் மாலையில் சர்வாணியும் இரவில் பைரவியும் நேரிடையாகக் காக்கட்டும். (பரா- இச்சா முதலிய சக்திகளாகத் தோன்றுமுன் இருந்த பராசக்தி. பரம்பொருளின் ஸங்கல்ப சக்தி. ஸ்ப்புரணம் என்ற துடிப்பு தொடங்கும் முன் நிலை. மூலாதாரத்திலிருந்து ஒலியாக சொல்லாக வெளிவருவதன் மூலநிலை. உலகைச் சிதைத்து உருமாற்றுகிற ஸம்ஹாரத்தின் ஈசன் சர்வர். அவரது சக்தி சர்வாணீ. ஒன்றுக்கொன்று முரண்படுபவை. மூன்றையும் செய்ய முற்படுகிற சிவன் பைரவர். அவரது சக்தி பைரவீ.) (204)*

भार्यां रक्षतु गौरी पायात्पुत्रांश्च बिन्दुगृहपीठा।
श्रीविद्या च यशो मे शीलं चाव्याच्चिरं महाराज्ञी॥

பார்யாம் ரக்ஷது கௌரீ
பாயாத்புத்ராம்ச்ச பிந்து க்ருஹ பீட்டா ।
ஸ்ரீவித்யா ச யசோ மே
சீலம் சாவ்யாத் சிரம் மஹாராஜ்ஞீ ॥

*மனைவியை கௌரியும் புதல்வர்களை பிந்து ஸ்தானத்தைப் பீடமாகக் கொண்டவளும் புகழை*

ஸ்ரீவித்யாவும் நன்னடத்தையை மஹாராஜ்ஞியும் காப்பாற்றட்டும். (கௌரீ- சங்கு முல்லை சந்திரன் போன்ற மஞ்சள் படர்ந்த வெண்ணிறம் கொண்டவள். கான்யகுப்ஜபீடத்தில் கனௌஜில் இருப்பவள்.) (198-204 சுலோகங்களை லலிதாகவசம் என்பர்.) (205)

पवनमयि पावकमयि क्षोणीमयि गगनमयि कृपीटमयि।
रविमयि शशिमयि दिङ्मयि समयमयि प्राणमयि शिवे पाहि॥

பவநமயி பாவகமயி
க்ஷோணீமயி ககநமயி க்ருபீட மயி।
ரவிமயி சசிமயி திங்மயி
ஸமயமயி ப்ராணமயி சிவே பாஹி ॥ 206

*காற்றானவளே! நெருப்பானவளே! பூமியானவளே! ஆகாசமானவளே! நீரானவளே! சூரியனானவளே! சந்திரனானவளே! திசையானவளே! நேரமானவளே! உயிரானவளே! மங்களமானவளே! காப்பாயாக! (பஞ்சபூதங்களும் ஸூர்ய சந்திரர்களும் தேசகாலங்களும் உலகின் மூலதத்துவங்கள். அவற்றின் வடிவில் தேவி காக்கிறாள்.) (206)*

कालि कपालिनि शूलिनि भैरवि मातङ्गि पञ्चमि त्रिपुरे।
वाग्देवि विन्ध्यवासिनि बाले भुवनेशि पालय चिरं माम्॥

காளி கபாலிநி சூலினி
பைரவி மாதங்கி பஞ்சமி த்ரிபுரே।
வாக்தேவி விந்த்ய வாஸினி
பாலே புவனேசி பாலய சிரம் மாம் ॥

*காளியே! கபாலினியே! சூலினியே! பைரவியே! மாதங்கியே! பஞ்சமியே! த்ரிபுரையே! வாக்தேவியே! விந்த்ய வாஸினியே! பாலையே! புவநேசியே! என்னை வெகுகாலம் காப்பாயாக! (காளீ-பிரளயம் நேர்வது படைப்பின் முன் நிலை. படைப்பும் பிரளயமும் காட்சி உணர்விற்கு உட்படுவதல்ல. திரோதாநகரியாயிருந்தவள்*

படைத்து வாழ்ந்ததை உருவிழக்கச் செய்ய வெளியில் கொடுமையும் உள்ளத்தில் மென்மையும் கொள்கிருள். அதனுல் கருநிறமும் கொடுமையும் கொண்டவள். மஹாகாலரின் சக்தி. கையில் கபாலம் ஏந்தி அழிபடுபவரின் ரத்தத்தை நிரப்பிக் குடிப்பவளானதால் கபாலிநீ. துர்க்கையின் ஒரு நிலை சூலினி. எட்டு கைகளுடன் சிங்கத்தின் மீது அமர்ந்தவள். சுற்றிக் கத்தியும் கேடயமும் தரித்த நான்கு கன்னிகைகள். காலபைரவரின் சக்தியான பைரவி. பயங்கரத் தோற்றமுள்ளவளாயினும் பயந்து நடுங்குகிறவர்களால் பயம் நீங்கவழிபடப் பெறுபவள்.மாதங்கீ - மதங்கரின் குமாரர் மாதங்கர் என்ற ருஷி. மந்திரிணீ தேவியின் உபாஸகர். இமவானின் நண்பர். இமவான் பார்வதியின் தந்தை என்ற பெருமை பெற்றவர். இமவானுக்குள்ள பெருமை தனக்கும் கிட்டவேண்டுமென்ற போட்டிமனப்போக்கால் மந்திரிணியை வேண்டி அவளை மகளாகப் பெற்ருர். மாதங்கீ லகு ச்யாமா சியாமளா என்ற பெயர் அவளுக்கு உண்டு. பஞ்சமீ - வாராஹிக்கும் இப்பெயர் உண்டு. பஞ்சபிரும்ஹங்களில் ஐந்தாமவரான ஸதாசிவரின் சக்தி, துரீயநிலை கடந்த சக்தி. பஞ்சமகாரங்களில் ஈடுபடுபவள் என்பர். முக்தி நிலையாயிருப்பவள் என்றும் கூறுவர். த்ரிபுரா- மும்மூர்த்திகளுக்கு முந்தியவள். அவர்களைப் படைப்பு முதலியவற்றில் ஈடுபடுத்தியவள். மூன்றுமூன்ருக உள்ள சரீரங்கள், நாடிகள், நிலைகள் அக்னிகள், சக்திகள், ஸ்வரங்கள், புடங்கள் என்பவற்றில் தங்குகிற சக்தி. அறம்பொருள் இன்பம் தருபவள். வாக்தேவீ-வசினீ முதலிய எட்டு வாக்தேவதைகளின் வடிவினள். விந்த்ய வாஸினீ - விந்திய மலையில் நந்தா என்ற பெயர் கொண்ட பீட சக்தி. யசோதையின் பெண்ணுகப் பிறந்து கம்ஸனிடமிருந்து விடுபட்டு விந்தியமலையில் குடியேறியவள். துவாபரத்தில் சும்ப நிசும்பர்களை அழித்தவள். - பாலா பண்டாஸுர வதத்திற்கென லலிதையாகத் தேவி தோன்றிய போது காமேசுவர - காமேசுவரர்களின் உள்ளத்திலிருந்து வெளிப்பட்டவள். லலிதை போன்ற உருவமைப்புடன்

*வர-அபய-புஸ்தக ஜபமாலைகள் ஏந்தியவள். புவனேச்வரீ - ஸூர்ய சந்திர-அக்னி சக்தியாகி உலகைவாழ வைப்பவள். மாயா சக்தியாக உலகைக்கட்டுப்படுத்துபவள். (207)*

अभिनवसिन्दूराभामंब त्वां चिन्तयन्ति ये हृदये।
उपरि निपतन्ति तेषां उत्पलनयना कटाक्षकल्लोलाः ।।

அபிநவஸிந்தூராபாம்
அம்ப த்வாம் சிந்தயந்தி யே ஹ்ருதயே ।
உபரி நிபதந்தி தேஷாம்
உத்பலநயநா கடாக்ஷகல்லோலா: ॥

*தாயே ! புதிய சிந்தூர வண்ணம் கொண்டவளாக உன்னை உள்ளத்தில் சிந்திப்பவர்கள் மீது லக்ஷ்மீயின் கடைக்கண் பார்வை அலைகள் பாயும். (208)*

वर्गाष्टकमिलिताभिः वशिनीमुख्याभिरावृतां भवतीम्।
चिन्तयतां सितवर्णां वाचो निर्यान्त्ययत्नतो वदनात्।।

வர்காஷ்டகமிலிதாபி:
வசிநீமுக்க்யாபிராவ்ருதாம் பவதீம் ।
சிந்தயதாம் ஸிதவர்ணாம்
வாசோ நிர்யாந்த்யத்நதோ வதநாத் ॥

*எட்டுவர்க்கங்களாகப் பிரிக்கப்பெற்ற எழுத்துக்களுடன் வசினீ முதலானவர்களால் சூழப்பெற்ற தங்களை வெண்ணிற மேனியளாகத் தியானம் செய்பவர்களுக்கு பேச்சு முயற்சியின்றி வெளிப்படும். (வசிநீ, காமேச்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயிநீ, ஸர்வேச்வரீ, கௌலினீ என்ற எட்டு வாக்தேவிகளும் अ-अः, क-ङ, च-ञ, ट-ण, त-न, प-म, य-व, श-क्ष என்று எட்டுவர்க்கங்களாகப் பிரிக்கப் பெற்ற உயிர்மெய் எழுத்துக்களில் முறையே அமர்ந்திருப்பதாகத் தியானம் செய்வர்.) (209)*

कनकशलाकागौरीं कर्णव्यालोल कुण्डलद्वितयाम्।
प्रहसितमुखीं च भवतीं ध्यायन्तो ये त एव भूधनदाः।।

கநகசலாகா கௌரீம்
கர்ணவ்யாலோல குண்டலத்விதயாம் ।
ப்ரஹஸிதமுகீம் ச பவதீம்
த்த்யாயந்தோ யே த ஏவ பூதநதா: ॥

*தங்கக்கம்பி போன்ற மஞ்சள் படர்ந்த வெண்ணிறமுள்ளவளும் காதுகளில் ஆடுகிற குண்டலங்கள் உள்ளவளும், சிரித்த முகமுள்ளவளுமாக தங்களைத் தியானிப்பவர் பூமியில் உள்ள குபேரர்களாவர். (210)*

शीर्षाम्भोरुहमध्ये शीतलपीयूषवर्षिणीं भवतीम्।
अनुदिन मनुचिन्तयतां आयुष्यं भवति पुष्कलमवन्याम्॥

சீர்ஷாம்ப்போருஹமத்த்யே
சீதளபீயூஷ வர்ஷிணீம் பவதீம் ।
அநுதினமநுசிந்தயதாம்
ஆயுஷ்யம் பவதி புஷ்கல மவந்யாம் ॥

*சிரசிலுள்ள ஆயிரம் இதழ் தாமரையின் நடுவே குளிர்ந்த அமுதத்தைப் பொழிபவளாகத் தங்களைத் தியானிப்பவர்கள் உலகில் அதிக ஆயுள் பெறுவர். (குண்டலினியை மூலாதாரத்திலிருந்து எழுப்பிக் கிரந்திகளைப்பிளந்து கொண்டு ஸஹஸ்ரதளகமலம் வரை கொண்டு சென்று அங்கு சிவனுடன் சேர்க்க, அமுதம் தாரையாகப் பெருகுகிறது. அது ஆறு ஆதாரங்களிலும் நிரம்ப அனைத்து ஆற்றல்கள் நிரம்பிய ஆயுள் நீடிப்பு ஏற்படுகிறது.) (211)*

मधुरस्मितां मदारुणनयनां मातङ्गकुंभवक्षोजाम्।
चन्द्रावतंसिनीं त्वां सविधे पश्यन्ति सुकृतिनः केचित्॥

மதுரஸ்மிதாம் மதாருணநயநாம்
மாதங்ககும்ப்பவக்ஷோஜாம் ।
சந்த்ராவதம்ஸிநீம் த்வாம் ஸவிதே
பச்யந்தி ஸுக்ருதிந: கேசித் ॥

*இனிய புன் சிரிப்புள்ளவளும் மதத்தால் சிவந்த கண்கள் உள்ளவளும் யானை மத்தகம் போன்ற மார்பகம் உள்ளவளும் சந்திரனைச் சூடியவளுமான உன்னை வெகுசில புண்ணியவான்களே அருகில் காண்கிறுர்கள். (212)*

ललितायाः स्तवरत्नं ललितपदाभिः प्रणीतमार्याभिः ।
प्रतिदिनमवनौ पठतां फलानि वक्तुं प्रगल्भते सैव ।।

லலிதாயா: ஸ்தவரத்னம்
லலிதபதாபி: ப்ரணீதம் ஆர்யாபி: ।
ப்ரதிதிநமவநெள படதாம்
பலாநி வக்தும் ப்ரகல்ப்பதே ஸைவ ॥

*எளிய சொற்களைக் கொண்டு ஆர்யா விருத்தத்தில் செய்யப்பட்ட இந்த லலிதையின் ஸ்தோத்திரரத்னத்தைத் தினந்தோறும் படிப்பவருக்குக்கிட்டும் பலன்களைச் சொல்ல அவள் ஒருவளால் தான் முடியும். (213).*

★ ★ ★

श्रीः

महर्षिश्रीदुर्वासः प्रणीतम्

# श्रीशक्ति-महिम्नः स्तोत्रम्

மஹர்ஷி துர்வாஸர் இயற்றிய

# ஸ்ரீசக்தி மஹிம்ன: ஸ்தோத்ரம்

— * — * —

मातस्ते महिमा वक्तुं शिवेनापि न शक्यते ।
भक्त्याहं स्तोतुमिच्छामि प्रसीद मम सर्वदा ॥

**மாதஸ்தே மஹிமா வக்தும் சிவேனாபி ந சக்யதே।**
**பக்த்யாஹம் ஸ்தோது-மிச்சாமி ப்ரஸீத மம ஸர்வதா॥**

*தாயே ! உன் பெருமையை விரித்துக் கூற சிவனாலும் இயலாது. பக்தியால் நான் துதிக்க விரும்புகிறேன். எனக்கு எப்போதும் அருள் புரிவாயாக. (1)*

श्रीमातस्त्रिपुरे परात्परतरे देवि त्रिलोकीमहा-
सौन्दर्यार्णव-मन्थनोद्भवसुधा-प्राचुर्य-वर्णोज्ज्वलम् ।
उद्यद्भानु-सहस्र-नूतन-जपापुष्पप्रभं ते वपुः
स्वान्ते मे स्फुरतु त्रिकोणनिलयं ज्योतिर्मयं वाङ्मयम् ॥

**ஸ்ரீமாதஸ்-த்ரிபுரே பராத்பரதரே தேவி த்ரிலோகீமஹா-**
**ஸௌந்தர்யார்ணவ - மந்த்தனோத்பவஸுதா -ப்ராசுர்ய**
**-வர்ணோஜ்ஜ்வலம்**
**உத்யத்பானு-ஸஹஸ்ர-நூதன-ஜபாபுஷ்பப்ரபம் தே வபு:**
**ஸ்வாந்தே மே ஸ்ப்புரது த்ரிகோணநிலயம் ஜ்யோதிர்-மயம் வாங்மயம்॥**

*சீர்மிக்க தாயே ! ஸ்தூல-ஸூக்ஷ்ம - காரண சரீரங்களில் உறைபவளே ! மேலானதற்கும் மேலானவளே ! (அப்பாற்பட்டதற்கும் அப்பாற்பட்டவளே) எங்கும் விளையாடுபவளே ! உன் திருமேனி, மூவுலகிலும் உள்ள பேரழகுக்*

கடலைக் கடைந்தெடுத்த அமுதமனைத்தின் தனித்த வண்ணத்துடன் துலங்குவது. உதிக்கின்ற ஆயிரம் சூரியர்கள் மற்றும் புதிய செம்பரத்தைப் பூக்களின் ஒளி கொண்டது. திரிகோணத்தின் நடுவே இருப்பது. மூல ஒளிமயமானது. பரா வாக் என்ற மூல ஒலிமயமானது. அது என் உள்ளத்தில் வெளிப்படட்டும்.

*(த்ரிகோணநிலயம்-த்ரிலோகநிலயம் என்ற பாடமுண்டு. மூவுலகமும் தோன்றி வாழ்ந்து மறையுமிடம். இந்த சுலோகத்தில் மந்திர சாஸ்திர ஸங்கேதமாக மஹாஷோடசியின் மந்திரம் உருவகப்படுத்தப் பட்டுள்ளதென்பர். ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஐம் ஸௌ: ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க ஏ ஈ லஹ்ரீம் ஹஸகஹலஹ்ரீம் ஸகலஹ்ரீம் ஸௌ: ஐம் க்லீம் ஹ்ரீம். இந்த மந்திரமும் ஈம் என்ற காம கலையில் அடங்கும். குருமுகமாக முறைப்படி உபதேசம் பெற்றுமட்டும் இதனைக் கூறத் தகும். நூல்முகமாகக் கற்றுக் கூறுவது பலனற்றது, தவறும் கூட என்பர்.) (2)*

आदिक्षान्त समस्त-वर्ण-सुमणि-प्रोते वितानप्रभे
ब्रह्मादि-प्रतिमाभिकीलित-षडाधाराब्ज-कक्षोन्नते।
ब्रह्माण्डाब्ज महासने जननि ते मूर्तिं भजे चिन्मयीं
सौषुम्नायत-पीतपंकज-महामध्य-त्रिकोण-स्थिताम्॥

**ஆதிக்ஷாந்த-ஸமஸ்த-வர்ண-ஸுமணி-ப்ரோதே விதாநப்ரபே**
**ப்ரஹ்மாதி-ப்ரதிமாபிகீலித-ஷடாதாராப்ஜ கக்ஷோந்நதே**
**ப்ரஹ்மாண்டாப்ஜ-மஹாஸனே ஜனனி தே மூர்த்திம் பஜே சின்மயீம்**
**ஸௌஷும்னாயத-பீதபங்கஜ-மஹாமத்ய-த்ரிகோண-ஸ்த்திதாம்॥**

*தாயே ! நீ அமர்ந்துள்ள ஆஸனமானது, அ முதல் க்ஷ வரை உள்ள அனைத்து எழுத்துக்களாகிற நல்ல ரத்தினங்கள் கோர்க்கப்பெற்றது. மேற்கட்டியால் நன்கு துலங்குவது. பிரும்மா விஷ்ணு ருத்ரர் ஈச்வரர் இவர்களின் உருவங்கள் செதுக்கப்பெற்று ஆறு ஆதாரங்களாகிய தாமரைகளாலான ஸ்தானங்களுக்கும் மேல் உயர்ந்துள்ளது. பிரம்ஹாண்டம் ஆகிய பிரும்ஹரந்திரத்திலுள்ள ஆயிர இதழ்த் தாமரையான பெரும் ஆஸனம் அது. அதன் மீது ஸுஷும்நா நாடியின் விரிந்த சிறந்த செம்மஞ்சள்*

நிறத்தாமரையின் நடுவில் முக்கோணத்தில் அமர்ந்துள்ள பேரறிவான உனது வடிவைத்தியானம் செய்கிறேன். (அகுலசக்கிரங்கள் இரண்டு. மூலாதாரம் ஸ்வாதிஷ்டானம் மணிபூரகம் விசுத்தி ஆஜ்ஞா என குல சக்கிரங்கள் ஆறு. இவற்றின் மேற்புறத்திலும் அடித்தளத்திலும் அகுல சக்கிரங்கள் ஆதாரமாக அமைந்துள்ளன. அகுலம் சிவன். குலம் சக்தி. ஆறு ஆதாரங்களுக்கு மேல் விதானம் (மேற்கட்டி) போல் ஸஹஸ்ராரம் என்ற ஆயிரம் இதழ்தாமரை அகுலம். மூலாதாரத்தின் கீழும் ஒரு அகுல ஸஹஸ்ராரம் உண்டு. மூலாதாரத்திலிருந்து சிவயோக முறையில் குண்டலினியை எழுப்பி மேலே செலுத்தி ஸஹஸ்ராரம் வரை இட்டுச் சென்று அங்குள்ள அகுல சிவனுடன் சேர்ப்பர். அங்குள்ள முக்கோணம் அ-க-த- ஆஸனம். அங்கே தேவி-சின் மயீ-சித்தெனும் மூல உணர்வின் வடிவானவள். (3)

या बालेन्दु-दिवाकराक्षिमधुरा या रक्तपद्मासना
रत्नाकल्प-विराजितांग-लतिका पूर्णेन्दुवक्त्रोज्ज्वला।
अक्षस्रक्-सृणि-पाश-पुस्तक-करा या बालभानुप्रभा
तां देवीं त्रिपुरां शिवां हृदि भजेऽभीष्टार्थ-सिद्ध्यै सदा[1] ॥

**யா பாலேந்து-திவாகராக்ஷிமதுரா யா ரக்தபத்மாஸனா**
**ரத்னாகல்ப-விராஜிதாங்க-லதிகா பூர்ணேந்து- வக்த்ரோஜ்ஜ்வலா।**
**அக்ஷஸ்ரக்-ஸ்ருணி-பாச புஸ்தக-கரா யா பாலபானுப்ரபா**
**தாம் தேவீம் த்ரிபுராம் சிவாம் ஹ்ருதி பஜேऽபீஷ்-டார்த்த-ஸித்த்யை ஸதா॥**

அவள் இளஞ் சந்திரனையும் இளஞ் சூரியனையும் கண்களாகக் கொண்டு இனிது காண்பவள், சிவந்த தாமரை மீது அமர்ந்தவள். ரத்தின ஆபரணங்களால் அழகுற்ற கொடிபோன்ற மேனியுடையவள், பூர்ண சந்திரன் போன்ற முகத்தால் ஒளிர்பவள், ஜபமாலை, துரட்டி, பாசம், புத்தகம் இவற்றைக் கைகளில் ஏந்தியவள். சூரியனை ஒத்த காந்தி உள்ளவள், முப்புரங்களைச் சார்ந்தவள், மங்கள வடிவினள், அலகிலா

1. இந்த சுலோகம் சில மூலநூல்களில் இல்லை.

விளையாட்டுடையவள், அவளை நாடிய பொருள் பெற எப்போதும் இதயத்தில் வழிபடுகிறேன். (4)

वन्दे वाग्भव-मैन्दवात्म-सदृशं वेदादि-विद्या-गिरो
भाषा देशसमुद्भवाः पशुगताश्छंदांसि सप्तस्वरान्।
तालान् पंच महाध्वनीन् प्रकटयत्यात्मप्रकाशेन यत्
तद्बीजं पदवाक्य-मान-जनकं श्रीमातृके ते परम्॥

**வந்தே வாக்பவ-மைந்தவாத்ம-ஸத்ருசம் வேதாதி-வித்யா-கிரோ**
**பாஷா தேசஸமுத்பவா: பசுகதாச்-சந்தாம்ஸி ஸப்தஸ்வரான்।**
**தாளான் பஞ்ச-மஹாத்த்வனீன் ப்ரகடயத்யாத்ம ப்ரகாசேன யத்**
**தத்பீஜம் பதவாக்ய-மான-ஜனகம் ஸ்ரீமாத்ருகே தே பரம்॥**

*சீர்மிக்க தாயே ! (மாத்ருகா எனும் அக்ஷரவடிவினளே !) உனது உயர்ந்த வாக்பவ பீஜத்தை வணங்குகிறேன். அது சந்திரனின் தனி உடைமையாகிய அமுதம் போன்றது. தன் விரிவாக்கத்தால் வேதம் முதலிய பதினான்கு வித்யைகள், மஹான்களின் உபதேசங்களாகிற புராணம் இதிஹாஸம் ஆகமம் முதலியவை, அந்தந்த தேசத்தில் தோன்றிய மொழிவகை, பிராணிகளின் குரல்கள், சந்தங்கள், ஏழு ஸ்வரங்கள் தாளங்கள் பேரீ முதலிய வாத்யங்களின் ஐந்துவிதமான தொனிகள், இவற்றை வெளிப்படுத்தியது. வியாகரணம், மீமாம்ஸை, நியாயம் முதலிய சாஸ்திரங்களின் தோற்றுவாய். (ஒலிவடிவான உலகின் வெளிப்படுமிடம் வாக்கு. அது தோன்றுமிடம் ஐம் என்ற வாக்பவபீஜம். பின்னர் மரமாக விரிவடையவிருக்கிற- தொன்றின் மூலக்கரு பீஜம் (விதை). பலவகைப்பட்ட ஒலிகளின் தொகுப்பே வேதம் முதலிய நன்னூல்களும் இசையும் சாஸ்திரங்களும். அவை வாக்பவ பீஜத்தில் துலங்குகின்றன. அ+இ+அ+ம் என்ற நான்கு உயிரெழுத்துகளின் கூட்டே ஐம் என்பது. அ.இ.உ. என்ற மூன்றும் எழுத்துக்களின் உயிர். ம் என்பது எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொள்கிற ஆத்மதத்துவம். அ+உ+ம்=ஓம். அ+இ=ஏ, அ+ஏ=ஐ+ம். ஐம் எனும் வாக்பவம். இது தேவிப் பிரணவம். ஓம் பிரும்ஹப்ரணவம். அ-ருக்வேதத்தின் ஆதி எழுத்து. இ.யஜுர்வேதத்தின் முதல் எழுத்து. அ-ஸாமவேதத்தின் ஆதி*

எழுத்து. அனுஸ்வாரமாகிய-ம்- அதர்வவேதத்தைக் குறிப்பிடும் என்பர். பாலலலிதாவான பாலாவின் மந்திரம் ஐம் க்லீம் ஸெள: என்ற பீஜங்கள் அமைந்தது. ஐம்-வாக்பவபீஜம். க்லீம்-காமராஜபீஜம். ஸெள:- சக்தி பீஜம். வாக்பவம் - தேவியின் தலைப்பகுதி. காமராஜம்-நடு உடல். சக்தி -கீழுடல். ஐந்து தொனிகள் 1. ததம் - தந்தி மீட்டலால் வருவது 2. ஆநத்த்தம் - தோல்வாத்திய ஒலி, 3. ஸுஷிரம் - குழல் முதலியதன் துவாரத்தால் ஒலி, 4. கனம் - ஜாலரா முதலியதன் ஒலி, 5. குரலொலி என. (5)

त्रैलोक्यस्फुट-मन्त्र-तन्त्र-महिमा स्वात्मोक्ति-रूपं विना[1]
यद्बीजं व्यवहारजाल-मखिलं नास्त्येव मातस्तव।
तज्जाप्य-स्मरण-प्रसक्त-सुमतिः सर्वज्ञतां प्राप्य कः
शब्दब्रह्मनिवासभूत-वदनो नेन्द्रादिभिः स्पर्धते॥

**த்ரைலோக்ய-ஸ்ப்புட-மந்த்ர-தந்த்ர-மஹிமா ஸ்வாத்மோக்தி ரூபம் விநா[2]**
**யத்பீஜம் வ்யவஹாரஜால-மகிலம் நாஸ்த்யேவ மாதஸ் தவ।**
**தஜ்ஜாப்ய-ஸ்மரண-ப்ரஸக்த-ஸுமதி: ஸர்வஜ்ஞதாம் ப்ராப்ய க:**
**சப்தப்ரஹ்ம-நிவாஸபூத-வதனோ நேந்த்ராதிபி: ஸ்பர்த்ததே॥**

தாயே ! உனது சுயநிலையை விளக்குகிற வாக்பவபீஜத்தின் துணையின்றி, மூவுலகிலும் பிரசித்தமான மந்திர தந்திரங்களின் பெருமைகளும் அனைத்து பேச்சு முதலிய நடைமுறைகளும் இல்லை. (பாடபேதப்படி மந்திர தந்திரங்களின் பெருமையை உணரமுடியாது. நடைமுறைகளும் இருக்காது.) அதனை ஜபிப்பதிலும் இடைவிடாது நினைவிற்கொள்வதிலும் நல்லறிவை முழுவதும் செலுத்தியவன் எல்லாமறிந்த நிலையடைந்து சப்த ப்ரும்ஹத்தின் உறைவிடமாகத் தன் முகத்தை ஆக்கிக் கொண்டு இந்திரன் முதலானோரும் தன்னிடம் பொறாமைப்படத்தக்க நிலைபெறுகிறான். (6)

1. सहिमां नाप्नोति शश्वद्विना 2. மஹிமாம் நாப்நோதி சச்வத் விநா

मात्रा याऽत्र विराजतेऽतिविशदा तामष्टधा मातृकां
शक्तिं कुण्डलिनीं चतुर्विधतनुं यस्तत्त्वविन्मन्यते।
सोऽविद्याखिलजन्म-कर्म-दुरितारण्यं प्रबोधाग्निना
भस्मीकृत्य विकल्पजाल-रहितो मातः पदं तीद्व्रजेत्।।*

**மாத்ரா யாऽத்ர விராஜதேऽதிவிசதா தாமஷ்டதா மாத்ருகாம்**
**சக்திம் குண்டலினீம் சதுர்வித-தனும் யஸ்தத்வவின்-மன்யதே।**
**ஸோऽவித்யாகில ஜன்ம-கர்ம-துரிதாரண்யம் ப்ரபோதாக்னினா**
**பஸ்மீக்ருத்ய விகல்பஜால-ரஹிதோ மாத: பதம் தத் வ்ரஜேத்॥**

தாயே ! இந்த வாக்பவ பீஜத்தில் அடங்கிய அ எனும் மாத்ருகாக்ஷரமே மிகவும் தெளிவான எட்டுவகை மாத்ருகாக்ஷரங்களாக நான்கு வடிவங்கள் கொண்ட குண்டலினீ சக்தியாக ஆகிறது. உண்மை நிலை உணர்ந்தவன் அதனை அவ்வாறு உணர்வான். உணர்ந்த பேரறிவு எனும் அக்கினியின் துணை கொண்டு அஜ்ஞானத்தால் விளைகிற பிறப்பு வினை பாபம் என்ற பெருங்காட்டைச் சாம்பலாக்கி ஐயங்களின்றி விளக்கவொண்ணாத பிரும்ஹ நிலை பெறுகின்றான். (வாக்பவ பீஜத்தின் முதல் எழுத்து பிரும்ஹத்தின் விபூதியான அ. அதுவே விரிந்து அ முதல் க்ஷ வரை உள்ள எழுத்துக்களாகிறது. அ-அ:, க-ங, ச-ஞ, ட-ண, த-ந, ப-ம, ய-வ, ஶ-க்ஷ என (அகசடதபயச) எட்டு வர்க்கங்களாகி வசினீ, காமேச்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயிநீ, ஸர்வேச்வரீ, கௌலினீ, என்ற எட்டு வாக் தேவிகளின் ஸ்தானமாகின்றது. பராவாக்காக மூலாதாரத்தில் வெளிப்பட்ட ஒலி ஆறு ஆதாரங்களில் உள்ள அக்னி குண்டலினீ, ஸூர்யகுண்டலினீ, ஸோம குண்டலினீ, ஸமஷ்டிகுண்டலினீ என்ற நான்கு சக்திகளாகி வெளிப்படுகிறது. இந்த இயக்கத்தால் பேரறிவு உண்டாகி பிறப்பிறப்புகளும் வினைகளும் அவற்றின் விளைவான பாபங்களும் தீய்ந்து ஆத்மநிலை உணரப்பெறுகிறது. (7)

---

★ இந்த சுலோகமும் சில மூலநூல்களில் இல்லை

तत्ते मध्यम-बीज- मम्ब कलयाम्यादित्यवर्णं क्रिया-
ज्ञानेच्छादि मनन्तशक्ति-विभव-व्यक्तिं व्यनक्ति स्फुटम्।
उत्पत्ति-स्थिति-कल्प-कल्पित-तनु स्वात्मप्रभावेन यत्
काम्यं ब्रह्महरीश्वरादि-विबुधैः कामं क्रियायोजितैः ।।

தத்தே மத்த்யம - பீஜ - மம்ப கலயாம் - யாதித்ய - வர்ணம் க்ரியா -
ஜ்ஞானேச்சாதி - மனந்தசக்தி - விபவ - வ்யக்திம் வ்யநக்தி ஸ்ப்புடம்।
உத்பத்தி - ஸ்த்திதி - கல்ப - கல்பித - தனு ஸ்வாத்ம - ப்ரபாவேன யத்
காம்யம் ப்ரஹ்மஹரீச்வராதி - விபுதை: காமம் க்ரியா - யோஜிதை: ॥

*தாயே ! சூரியனது நிறம் கொண்ட உனது நடுவிலுள்ள காமராஜபீஜத்தைத் தியானிக்கிறேன். அது கிரியா ஜ்ஞாநா இச்சா என்ற மூன்று சக்திகளுக்கும் தோற்றுவாய். எண்ணற்ற சக்திகளின் விரிவையும் தனித்தன்மையையும் வெளிப்பாட்டையும் புரியும்படி விளக்குகிறது. தனது தனித்த சிறப்பால் உலகின் உற்பத்தி, காப்பு, ஒடுக்கம் என்ற மூன்றிற்கும் ஏற்ற உருவெடுக்கிறது. அந்தப் பணிகளில் நியமிக்கப்பெற்ற பிரும்மா, விஷ்ணு ருத்திரன் முதலிய தேவர்களால் விரும்பிப் பூஜிக்கப்பெறுகிறது. அதனைத்தியானிக்கிறேன். (இந்த பீஜத்திலிருந்து உலகமாக விரிவடைய இச்சா ஜ்ஞானா க்ரியா என்ற மூன்று சக்திகள்; அவர்களின் விரிவான வாமா என்ற ஸ்ருஷ்டி சக்தி, ஜ்யேஷ்ட்டா என்ற ஸ்திதி சக்தி, ரௌத்ரீ என்ற ஸம்ஹார சக்தி. அந்த சக்திகளைக் கொண்டு பணி புரிகிற பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மூன்று தேவர்கள், கடந்தது, நிகழ்வது, நடக்கவிருப்பது என்ற காலங்கள், வானுலகம், பூமி, பாதாளம் என்ற தேசங்கள். ருக், யஜுஸ், ஸாமம் என்ற வேதங்கள் என்று எல்லையற்று விரிகிறது.) (8)*

कामान् कारणतां गतान् अगणितान् कार्यै-रनन्तै-र्मही-
मुख्यैः सर्वमनोगतै-रधिगतान् मानैरनेकैः स्फुटम्।
कामक्रोध-सलोभमोह-मदमात्सर्यारि-षट्कं च यत्
बीजं भ्राजयति प्रणौमि तदहं ते साधु कामेश्वरि ।।

**காமான் காரணதாம் கதா-னகணிதான் கார்யை ரனந்தைர் - மஹீ -**
**முக்க்யை: ஸர்வ - மஜ்ஞேகதை - ரதிகதான் மானை - ரனேகை:**
**ஸ்ப்புடம்।**
**காமக்ரோத - ஸலோபமோஹ - மத - மாத்ஸர்யாரிஷட்கஞ்ச யத்**
**பீஜம் ப்ராஜ்யதி ப்ரணௌமி ததஹம் தே ஸாது காமேச்வரி॥**

*ஹே காமேச்வரி ! (காமராஜகூடத்தின் தேவதையே !) உனது காமராஜ பீஜத்தை நன்கு வணங்குகிறேன். (பிரும்மாதியரின்) எண்ணற்ற இச்சைகள் காரணமாக எண்ணற்ற காரியங்களாக பூமி முதலானவை தோன்றின. அவற்றாலும் தோன்றிய பிராணிகளின் மனப்போக்குப்படி பலவித மதிப்பீட்டாலும் அவை பலவாகி எண்ணற்றதாயின. காரணமான பிரும்மாதிகளின் இச்சையையும் காரியமான உலகின் இச்சையையும் காமம், கோபம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என ஆறு எதிர் உணர்வுகளையும் காமராஜ பீஜம் வெளிச்சமிட்டுக் காட்டுகிறது. அதனை வணங்குகிறேன். (9)*

यद्भक्ताखिल-कामपूरणचण-स्वात्मप्रभावं महा-
जाड्यध्वान्त-विदारणैक-तरणिज्योतिः प्रबोधप्रदम्।
यद्वेदेषु च गीयते श्रुतिमुखं मात्रात्रयेणोमिति
श्रीविद्ये तव सर्वराज-वशकृत् तत्कामराजं भजे॥

**யத்ப்பக்தாகில-காமபூரணசண-ஸ்வாத்ம-ப்ரபாவம் மஹா-**
**ஜாட்யத்த்வாந்த-விதாரணைக-தரணிஜ்யோதி: ப்ரபோதப்ரதம்।**
**யத் வேதேஷு ச கீயதே ச்ருதிமுகம் மாத்ராத்ரயேணோமிதி**
**ஸ்ரீவித்யே தவ ஸர்வராஜ-வசக்ருத் தத் காமராஜம் பஜே॥**

*ஸ்ரீ வித்யைவடிவினளே ! உமது காமராஜ பீஜத்தை வழிபடுகிறேன். அது அண்டினவர்களின் விருப்பங்கள் அனைத்தையும் நிரப்புவதில் தேர்ந்த சுயப் பெருமை கொண்டது. பெரும் அறியாமையாகிற இருளைச் சிதைப்பதில் தனியார்வம் கொண்ட சூரிய ஒளியானது. பேருணர் வைத்தருவது. அதனை மூன்று வேதங்களில் மூன்று மாத்திரைகளில் உச்சரிக்கத்தக்கதும் வேதமோதத் தொடங்குமுன் கூறப்படுவதுமான ஓங்காரமாகக் கூறுவர். எல்லா அரசர்களையும் வசப்படுத்துகிற அந்த காம*

*ராஜத்தை வழிபடுகிறேன். (ஈம்.காமபீஜத்தின் ஸாரமான காமகலை. அதனைக் கொண்ட க்லீம்-காமராஜ பீஜம்.) (10)*

यत्ते देवि तृतीयबीज-मनलज्वालावली-सन्निभं
सर्वाधार-तुरीयबीज-मपरब्रह्माभिधा-शब्दितम्।
मूर्धन्यान्त-विसर्ग-भूषितमहौकारात्मकं तत्परं
संविद्रूपमनन्य-तुल्य महिम स्वान्ते मम द्योतताम्॥

**யத்தே தேவி த்ருதீயபீஜ - மனலஜ்வாலாவலீ - ஸந்நிபம்**
**ஸர்வாதார - துரீயபீஜ - மபர - ப்ரஹ்மாபிதா - சப்திதம்।**
**மூர்த்தன்யாந்த - விஸர்க்க - பூஷிதமஹௌகாராத் மகம் தத்பரம்**
**ஸம்வித்ரூப - மனன்ய - துல்ய - மஹிம ஸ்வாந்தே மம த்யோததாம்॥**

*தேவியே ! உனது மூன்றுவதான சக்தி பீஜம் என் உள்ளத்தில் துலங்கட்டும். அது நெருப்பின் வரிசையான பிழம்பு போன்றது. எல்லாவற்றிற்கும் ஆதாரமான திரிகோணத்தின், விளக்க அக்ஷரமான ஏகாரத்திலிருந்து நான்காவது 'ஔ' என்ற பீஜாக்ஷரம். (ஸௌ: என்பது சக்தி பீஜம். அதன் முக்கியப்பகுதி) அபரப்ரம்ஹம் என்ற பெயரால் குறிப்பிடப்பெறுவது. மூர்த்தன்ய அக்ஷரமான 'ஷ'விற்குப் பிறகு வருகிற ஸகாரத்தாலும் விஸர்கத்தாலும் முன்னும் பின்னும் அலங்கரிக்கப்பெற்ற பெருமைமிக்க ஔகார வடிவிலுள்ளது. அந்தச் சிறந்த பேருணர்வுமயமானது. வேறொன்றுடன் ஒப்பிட இயலாதது. அது உள்ளத்தில் துலங்கட்டும். (பராபீஜம் - சக்திபீஜம் -ஸௌ:) (11)*

सर्वं सर्वत एव सर्गसमये कार्येन्द्रियाण्यन्तरा
तत्तद्दिव्य-हृषीक-कर्मभिरियं संव्यश्नुवाना परा।
वागर्थ-व्यवहार-कारणतनुः शक्ति-र्जगद्रूपिणी
यद्बीजात्मकतां गता तव शिवे तन्नौमि बीजं परम्॥

**ஸர்வம் ஸர்வத ஏவ ஸர்க்கஸமயே கார்யேந்த்ரியாண்யந்தரா**
**தத்தத்திவ்ய - ஹ்ருஷீக - கர்மபிரியம் ஸம்வ்யச்நுவானா பரா।**
**வாகர்த்த - வ்யவஹார - காரணதனு: சக்திர் - ஜகத்ரூபிணீ**
**யத்பீஜாத்மகதாம் கதா தவ சிவே தந்நௌமி பீஜம் பரம்॥**

மங்களவடிவினளே ! அந்த உமது மிக மேலான பீஜத்தைத் துதிக்கிறேன். படைக்கத் தொடங்குகையில், அனைத்திலும் எல்லா நிலைகளிலிருந்தும் உள்ளும் புறமும் அந்த அந்த இந்திரியங்களை அதனதன் செயல்களுடன் இணைத்துப் பரவிய அந்த பராசக்தி, சொல்லும் பொருளுமாகி உலக நடைமுறைக்கு உதவுகிற வடிவங்களை ஏற்கிறாள். உலகம் முழுதும் பரவி நிற்பவள். அவள் இந்த சக்தி பீஜ நிலையடைகிறாள். அந்த மேலான சக்தி பீஜத்தை வணங்குகிறேன். (படைக்கிற போது காமகலையாக, காக்கும்போது உலகவடிவினளாக பின் லயகாலத்தில் பரா பீஜமாகிறாள்.) (12)

अग्नीन्दु-द्युमणि-प्रभंजन-धरा-नीरान्तर-स्थायिनी
शक्तिर्ब्रह्महरीश-वासव-मुखामर्त्यासुरात्म-स्थिता।
सृष्टस्थावरजङ्गम-स्थित-महा-चैतन्यरूपा च या
यद्बीजस्मरणेन सैव भवती प्रादुर्भवत्यम्बिके ॥

**அக்னீந்து - த்யுமணி - ப்ரபஞ்ஜன - தரா - நீராந்தரஸ்த்தாயினீ**
**சக்திர் - ப்ரஹ்ம - ஹரீச - வாஸவ - முகாமர்த்யாஸுராத்ம - ஸ்த்திதா।**
**ஸ்ருஷ்ட - ஸ்த்தாவர ஜங்கம - ஸ்த்தித - மஹாசைதன்ய ரூபா ச யா**
**யத் - பீஜஸ்மரணேன ஸைவ பவதீ ப்ராதுர்ப்பவத்யம்பிகே॥**

அனைத்துக் காப்பவளே ! நீயே அக்னி, சந்திரன், ஸூரியன், வாயு, பூமி, நீர், ஆகாயம் இவற்றின் அந்தர்யாமியாக உள்ளிருப்பவள், பிரும்மா, விஷ்ணு, ஈசன், இந்திரன் முதலான தேவர்களிடமும் அஸுரர்களிடமும் ஆத்மாவாக இருப்பவள், படைக்கப்பெற்ற தாவரத்திலும் ஜங்கமத்திலும் உள்ளிருக்கிற உள்ளுணர்வாக இருப்பவள், இந்த சக்திபீஜத் தியானத்தால் முன் தோன்றுகிறாய். (ஸத்-சித்-ஆனந்தம் என்ற பிரும்ஹ நிலை அந்தர்யாமியாக, பேருணர்வாக, ஆனந்தமாக வெளிப்படுகிறது.) (13)

स्वात्म श्रीविजिताजविष्णु मघव श्रीपूर्णैकव्रतं
सद्विद्या-कविता-विलासलहरी[1]-कल्लोलिनी-दीपकम्।

1. कविता वितानलहरीकल्लोलदीपाङ्कुरम्

बीजं यत् त्रिगुणप्रवृत्ति-जनकं ब्रह्मेति यद्योगिनः
शान्ताः सत्य-मुपासते तदिह ते चित्ते दधे श्रीपरे ॥

ஸ்வாத்மஶ்ரீ- விஜிதாஜ- விஷ்ணு - மகவ-ஸ்ரீ பூரணை கவ்ரதம்
ஸத்வித்யா-[2] கவிதா-விலாஸலஹரீ- கல்லோலினீ- தீபகம்।
பீஜம் யத் த்ரிகுணப்ரவ்ருத்தி-ஜனகம் ப்ரஹ்மேதி யத்யோகின:
சாந்தா: ஸத்ய-முபாஸதே ததிஹ தே சித்தே ததே ஸ்ரீபரே॥

சிறப்பால் மேலானவளே ! தனது தனித்த சிறப்பால் வெல்லப்பட்ட பிரும்மா விஷ்ணு இந்திரன் இவர்களுக்குச் சிறப்பு நிறைவுறச் செய்வதை விரதமாகக் கொண்ட உனது பராபீஜத்தை இங்கு மனத்தில் கொள்கிறேன். அது நல்ல வித்யை, கவிதையின் சொல்லழகு இவற்றின் விரிவலையைத் தூண்டிவிடக் கூடியது. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் இயக்கத்தைத் தோற்றுவிப்பது, சித்தமடங்கி அமைதி பெற்றயோகிகள் இதனை பிரும்ஹம் என்றும் ஸத்யம் என்றும் உபாஸிப்பர். அதனை சித்தத்தில் கொள்வேன். (14)

एकैकं तव मातृके परतरं संयोगि वाऽयोगि वा
विद्यादिप्रकट-प्रभाव-जनकं जाड्यान्धकारापहम्।
यन्निष्ठाश्च महोत्पलासन-महाविष्णु-प्रहर्त्रादयो
देवाः स्वेषु विधिष्वनन्त-महिम-स्फूर्तिं दधत्येव तत् ॥

ஏகைகம் தவ மாத்ருகே பரதரம் ஸம்யோகி வாऽயோகி வா
வித்யாதி ப்ரகட-ப்ரபாவ-ஜனகம் ஜாட்யாந்த்த காராபஹம்:
யந்நிஷ்ட்டாச்ச மஹோத்பலாஸன-மஹாவிஷ்ணு- ப்ரஹர்த்ராதயோ
தேவா: ஸ்வேஷு விதிஷ்வனந்த-மஹிம-ஸ்ப்பூர்த்திம் தத்யேவ தத்॥

மாத்ருகாக்ஷர வடிவினளே ! (தாயே !) உன்னுடைய ஒவ்வொரு பீஜமும் சேர்ந்தும் தனித்தும் மனனம் செய்யப்பட வித்யை முதலியவற்றை நன்கு அழகாக வெளிப்படுத்துகிற ஆற்றலை உண்டாக்கும். அறியாமை எனும் இருளை அகற்றும். அந்த அந்த மந்திராக்ஷரங்களில் நிலைத்த சித்தமுடைய பிரும்மா

2. கவிதா விதாநலஹரீ கல்லோல தீபாங்குரம்

விஷ்ணு ருத்ரர் முதலான தேவர்கள் தம் தம் பணிகளில் பிறரை எதிர்பாராது பெருமை தரவல்ல திறமையைக் கையாளுகின்றனர். (மூன்று பீஜங்களும் சேர்ந்ததே மந்திரம். எனினும் ஒவ்வொன்றையும் தனித்து மனனம் செய்தும் சித்தி பெறலாம்.) (15)

इत्थं त्रीण्यपि मूल-वाग्भव-महा श्रीकामराज- स्फुर-
च्छक्त्याख्यानि चतुः-श्रुतिप्रकटितान्युत्कृष्ट-कूटानि ते।
भूतर्तु-श्रुति-संख्य-वर्ण-विदितान्यारक्तकान्ते शिवे
यो जानाति स एव सर्वजगतां सृष्टि-स्थिति-ध्वंसकृत्॥

**இத்த்தம் த்ரீண்யபி மூல-வாக்பவ-மஹா ஸ்ரீகாமராஜ ஸ்ப்புரச்**
**சக்த்யாக்க்யானி சது: ச்ருதிப்ரகடிதான் யுத்க்ருஷ்ட-கூடானி தே।**
**பூத-ருது-ச்ருதி-ஸங்க்க்ய-வர்ண-விதிதான்-யாரக்த-காந்தே சிவே**
**யோ ஜானாதி ஸ ஏவ ஸர்வஜகதாம் ஸ்ருஷ்டி-ஸ்த்திதி-த்த்வம்ஸக்ருத்॥**

இளஞ் சிவப்பான அழகியே ! மங்களமானவளே ! இவ்வாறு மூலமந்திரமான வாக்பவ கூடம், மஹா ஸ்ரீ காமராஜ கூடம், துலங்குகிற சக்தி கூடம் என்ற மூன்றும் நான்கு வேதங்களிலும் விளக்கப்பட்டவை. மிகவும் சிறந்தவை. ஐந்து-ஆறு-நான்கு என்று எண்ணிக்கையுள்ள எழுத்துக்களால் உணரப்பெறுபவை. இதனை அறிந்தவனே உலகின் படைப்பு காப்பு ஸம்ஹாரம் என்ற மூன்றையும் செய்பவனாகிறான். (इन्द्रो मायाभिः पुरुहूत ईयते என ருக்வேதமும் चत्वार ईं बिभ्रति क्षेमयन्तः என யஜுர் வேதமும் य ईं चकार नयो अस्य वेद என ஸாம வேதமும் कामो योनिः कामकला என அதர்வவேதமும் ஸ்ரீவித்யையைக் குறிப்பிடுகின்றன. க ஏ ஈ ல ஹ்ரீம் என ஐந்தெழுத்துக்கள் வாக்பவ கூடம், ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் என ஆறெழுத்துக்கள் காமராஜ கூடம், ஸ க ல ஹ்ரீம் என நான்கெழுத்துக்கள் சக்தி கூடம் என பஞ்சதசாக்ஷரியான தேவியை இங்கு நினைவில் கொள்கிறோம்.) (16)

ब्रह्मा योनि-रमा-सुरेश्वर - सुहृल्लेखाभिरुक्तैस्तथा
मार्ताण्डेन्दु-मनोज -हंस- वसुधा - मायाभिरुत्तंसितैः।
सोमाम्बु-क्षिति-शक्तिभिः प्रकटितै -र्बाणांगवेदैः क्रमाद्
वर्णैः श्रीशिवदेशिकेन विदितां विद्यां तवाम्बाश्रये॥

**ப்ரஹ்மா-யோனி-ரமா-ஸுரேச்வர-ஸுஹ்ருல்லேகாபி-ருக்தைஸ்ததா**
**மார்த்தாண்டேந்து-மனோஜ-ஹம்ஸ-வஸுதா-மாயாபி-ருத்தம்ஸிதை:।**
**ஸோமாம்பு-க்ஷிதி-சக்திபி: ப்ரகடிதைர் பாணாங்க- வேதை: க்ரமாத்-**
**வர்ணை: ஸ்ரீசிவதேசிகேன விதிதாம் வித்யாம் தவாம்பாச்ரயே ॥ ★**

*தாயே ! சிவனாகிய குரு விளக்கிய (பஞ்சதசாக்ஷரீ) வித்யையை நான் அண்டியுள்ளேன். பிரும்ஹா (க) யோநி (ஏ) ரமா (ஈ) ஸுரேசுவரனான இந்திரன் (ல) ஹ்ருல்லேகா (ஹ்ரீம்) அவ்வாறே ஸூர்யன் (ஹ) சந்திரன் (ஸ) மன்மதன் (ஹ) ஹம்ஸம் (க) பூமி (ல) மாயா(ஹ்ரீம்) அவ்வாறே சந்திரன் (ஸ) ஜலம் (க) பூமி (ல) சக்தி (ஹ்ரீம்) என்று பாண (5) அங்கம் (6) வேதம் (4) என்ற எண்ணிக்கை கொண்ட எழுத்துக்களால் சிவனாகிய குருவால் உணர்த்தப்பெற்ற உன் மந்திரமாகிய வித்யையை அண்டிநிற்கிறேன். (பெண்ணைத் தேவதையாகக் கொண்ட மந்திரம் வித்யை எனப்படும்.) (17)*

नित्यं यस्तव मातृकाक्षर सखीं सौभाग्यविद्यां जपेत्
संपूज्याखिल चक्रराजनिलयां सायंतनाग्नि प्रभाम्।
कामाख्यं शिवनामतत्त्वमुभयं व्याप्यात्मना सर्वतो
दीव्यन्ती- मिह तस्य सिद्धि - रचिरात् स्यात् त्वत्स्वरूपैकता ॥

**நித்யம் யஸ்தவ மாத்ருகாக்ஷர-ஸகீம் ஸௌபாக்ய- வித்யாம் ஜபேத்**
**ஸம்பூஜ்யாகில-சக்ரராஜநிலயாம் ஸாயந்தனாக்னி-ப்ரபாம்।**
**காமாக்க்யம் சிவநாம-தத்வமுபயம் வ்யாப்யாத்மனா ஸர்வதோ**
**தீவ்யந்தீ-மிஹ தஸ்ய ஸித்தி-ரசிராத் ஸ்யாத் த்வத்ஸ்வரூபைகதா ॥**

*உனது ஸௌபாக்யவித்யையை மாத்ருகாக்ஷர ஜபவிதானத்தின் துணை கொண்டு ஜபித்துப் பின் எல்லா சிறந்த சக்கிரங்களிலும் ஆவரண தேவதைகளாக இருப்பவளும் மாலை நேரத்து அக்னியின் ஒளிபெற்றவளும் ஐந்து பிரும்ஹ சக்திகளின் மீதும் காமேச்வரரின் மீதும் அமர்ந்தவளாக இவர்களுக்குள் தன் தனித்தன்மையால் பரவி ஒளிர்கிறவளுமாக உன்னை வழிபட உன்னுடன் ஐக்கியமடைகிற ஸித்தி ஏற்படும். (ஸௌபாக்யவித்யை- பஞ்சதசியின் ஒவ்வொரு கூடத்தின் முன்*

---

★ இந்த சுலோகம் சில பாடங்களில் இல்லை.

வரிசையாக பாலாவின் ஒவ்வொரு பீஜாக்ஷரத்தை இணைத்து ஜபிப்பதாகும். ஜப முறைகளில் சிறந்தது மாத்ருகாக்ஷரமுறை. 'அ'முதல் 'ள' வரை 50 அக்ஷரங்கள், திருப்பி 'ள' முதல் 'அ'வரை 50 அக்ஷரங்கள். அக்ஷரமாலை என்ற ஜபமாலையில் 50 மணிகளும் ஒரு தொங்கும் நடுமணியும் இருக்கும். நடுமணி எண்ணுவதற்குப் பயன்படாது. ஒன்று முதல் ஐம்பது வரை எண்ணி மாலையைத் திருப்பி ஐம்பதாவது மணியிலிருந்து முதல் மணிவரை ஜபிப்பது சிறந்த ஜபமாலைமுறை. அதைவிட அ முதல் ள வரை உள்ள எழுத்துக்களை மூலாதாரத்திலிருந்து ஆஜ்ஞா வரை தொடர்கிற ஸுஷும்னையில் கீழிருந்து மேல்வரை மனத்தினுள் வரைந்து, அந்த எண்ணிக்கையில் ஜபித்து மறுபடி ள முதல் (ஆஜ்ஞை முதல்) அ வரை (மூலாதாரம் வரை) ஜபிப்பது ஸுஷும்நா மாத்ருகாக்ஷரமுறை. விரைவில் மந்திர ஸித்தி அளிக்கவல்லது. வெளி உபகரணமின்றி சிந்தனை ஒருமித்துப் பாவனையால் நிறைவுறுகிற ஸாதனை இது. சக்ரராஜம் என்ற ஸ்ரீ சக்கிரத்தில் ஒன்பது சக்கிரங்களால் ஆவரணம் உள்ளது. பிந்து, த்ரிகோணம், எட்டு கோணம், இரு பத்து கோணங்கள், பதினான்கு கோணம், எட்டுதளம், பதினாறுதளம், மூன்றுவட்டம், மூன்று சதுரக்கோடுகளாலான பூ புரம் என.) (18)

**काव्यैर्वा पठितैः किमल्पविदुषां जोघुष्यमाणैः पुनः**
**किं तै-र्व्याकरणैर्विबोबुधिषया[1] किं वाभिधानश्रिया।**
**एतैरम्ब न बोभवीति सुकवि-स्तावत्तव श्रीमतोः**
**यावन्नानुसरीसरीति सरणिं पादाब्जयोः पावनीम्॥**

**காவ்யைர்வா படிதை: கிமல்பவிதுஷாம் ஜோகுஷ்ய - மாணை: புன:**
**கிம் தைர் - வ்யாகரணைர் - விபோபுதிஷயா[2] கிம் வாபிதானச்ரியா।**
**ஏதைரம்ப ந போபவீதி ஸுகவிஸ் - தாவத்தவ ஸ்ரீமதோ:**
**யாவந் நானுஸரீஸரீதி ஸரணிம் பாதாப்ஜயோ: பாவனீம்॥**

தாயே ! எல்லா சீரும் சிறப்பும் நிறைந்த உம் திருவடித்தாமரைகளின் தூய்மைப்படுத்துகிற அடிவரிசையைப் பின்பற்றாதவனுக்கு அற்ப அறிவுபெற்றவர்களின் காவியங்களைப்

1. विबोधिततया 2. விபோதிததயா

*படித்தென்ன லாபம் ? அல்லது கொண்டாடப்பெறுகிற வியாகரணத்தால் என்ன லாபம் ? பொருளை அறியச் சப்த கோசங்களைப்படித்தென்ன லாபம் ? இவற்றால் நல் கவியாக ஒருவன் ஆக முடியாது. (19)*

गेहं नाकति गर्वितः प्रवणति स्त्रीसंगमो मोक्षति
द्वेषी मित्रति पातकं सुकृतति क्ष्मावल्लभो दासति ।
मृत्युर्वैद्यति दूषणं सुगुणति त्वत्पाद-संसेवनात्
त्वां वन्दे भवभीति-भंजनकरीं गौरीं गिरीशप्रियाम् ।। २०

**கேஹம் நாகதி கர்வித: ப்ரவணதி ஸ்த்ரீஸங்கமோ மோக்ஷதி**
**த்வேஷீ மித்ரதி பாதகம் ஸுக்ருததி க்ஷ்மாவல்லபோ தாஸதி ।**
**ம்ருத்யுர்-வைத்யதி தூஷணம் ஸுகுணதி த்வத்பாத-ஸம்ஸேவனாத்**
**த்வாம் வந்தே பவபீதி-பஞ்ஜனகரீம் கௌரீம் கிரீசப்ரியாம் ॥**

*உனது திருவடிகளை வழிபடுவதால் வீடு ஸ்வர்கமாகும். செருக்குற்றவன் வணங்குவான். பெண்ணின் உறவு முக்தி தரும். எதிரி நண்பனாவான். பாபம் புண்யமாகும். அரசன் அடிமையாவான். யமன் வைத்யனாவான். கெட்டகுணம் நல்ல குணமாகும். பிறப்பிறப்புத் தொடரால் ஏற்படுகிற பயத்தைப் போக்குகிற கிரீசனின் மனைவியான கௌரியான உன்னை வணங்குகிறேன். (20)*

आद्यै रग्नि रवीन्दु बिम्ब निलयै रम्ब त्रिलिंगात्मभिः
मिश्रा रक्त सित प्रभै रनुपमै र्युष्मत्पदै स्तै स्त्रिभिः ।
स्वात्मोत्पादित काल लोक निगमावस्थामरादि त्रयैः
उद्भूतं त्रिपुरेति नाम कलयेद्यस्ते स धन्यो बुधः ।।

**ஆத்யை-ரக்னி-ரவீந்து-பிம்ப-நிலயை ரம்ப த்ரிலிங்காத்மபி:**
**மிச்ரா ரக்த-ஸித-ப்ரபை - ரனுபமை - யுஷ்மத்பதை- ஸ்தை - ஸ்த்ரிபி: ।**
**ஸ்வாத்மோத்பாதித-கால லோக-நிகமாவஸ்த்தாமராதி- த்ரயை:**
**உத்பூதம் த்ரிபுரேதி நாம கலயேத் யஸ்தே ஸ தன்யோ புத: ॥**

*தாயே ! உனது திரிபுரா என்ற பெயரைப் பொருள் உணர்ந்து சொல்பவன் பாக்யம் பெற்றவன். அவனே அறிவாளி. अ.क.थ என்ற மூன்றெழுத்துக்களை முதலாவதாகக் கொண்ட எழுத்துக்களாலானதும் ஹ ள க்ஷ என்ற எழுத்துக்களாலானதுமான உனது மணிபீடம், அக்னி மண்டலம், சூர்யமண்டலம், சந்திர மண்டலம் என்ற மூன்று இருப்பிடங்கள், மூலாதாரத்திலும் இதயத்திலும் புருவ நடுவிலுமுள்ள ஸ்வயம்பூ, பாணம், இதரம் என்ற மூன்று லிங்கங்கள், மிச்ரம் என்ற நிறக்கலவை, மஞ்சள் கலந்த சிகப்பு, வெள்ளை என்ற மூன்று நிறங்களில் உள்ள உனது ஒப்பற்ற திருவடிகள், கடந்தது நிகழ்வது வரவிருப்பது என்ற மூன்று காலங்கள். ஸ்வர்கம் பூமி பாதாளம் என்ற மூன்று உலகங்கள், ருக் யஜுஃ: ஸாம என்ற மூன்று வேதங்கள், விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகள், பிரும்மா விஷ்ணு ருத்ரர் என்ற மூன்று தேவர்கள் என மும்மூன்றாக உள்ளதனைத்தாலும் வெளிப்பட்டது திரிபுரா என்ற பெயர். (अமுதல் अःவரை பதினாறு. क முதல் तவரை பதினாறு. थ முதல் स வரை பதினாறு எழுத்துக்கள் என முக்கோணமாக அமைந்த ஆஸனம். அவற்றினுள்ளே ஹ ள க்ஷ என்ற மூன்றும் ஒவ்வொரு கோணத்திலும். இவ்வாறு அமைந்தது* **अकथासनं** *என்ற மாத்ருகாபீடம். தேவியே குருவாக வருவதை உணர்வதால் குருவந்தனத்தில்* **रक्तशुक्लप्रभामिश्रं त्रैपुरं महः** *என்று கூறி ரக்தம், சுக்லம், மிச்ரம் என்ற மூன்றொளி கொண்டதாக குரு சரணங்களைத் தியானிப்பர்.) (21).*

आद्यो जाप्यतमार्थ वाचकतया रूढः स्वरः पंचमः
सर्वोत्कृष्टतमार्थ वाचकतया वर्णः पवर्गान्तकः ।
वक्तृत्वेन महाविभूतिसरणिस्त्वाधारगो हृद्गतो
भ्रूमध्ये स्थित इत्यतः प्रणवता ते गीयतेऽम्बागमैः ॥

**ஆத்யோ ஜாப்யதமார்த்த - வாசகதயா ரூட: ஸ்வர: பஞ்சம:**
**ஸர்வோத்க்ருஷ்டதமார்த்த - வாசகதயா வர்ண: பவர்க்காந்தக:।**
**வக்த்ருத்வேன மஹாவிபூதி - ஸரணி - ஸ்த்வாதாரகோ ஹ்ருத்கதோ**
**ப்ரூமத்த்யே ஸ்த்தித இத்யத: ப்ரணவதா தே கீயதேऽம்பாகமை: ॥**

தாயே ! நீயே பிரணவமாக உள்ளாய் என்பதை ஆகமங்கள் புகழ்ந்து பாடுகின்றன. (பிரணவம் அ உ ம் என்ற மூன்று பகுதிகள் கொண்டுள்ளது.) முதலாவதான அகாரம் ஜபிக்கத்தக்க பொருட்களில் மிகச் சிறந்த மூலவித்யை என்று சொல்ல வந்தது. ஐந்தாவது உயிரெழுத்தான உகாரம் எல்லாவற்றிலும் உயர்ந்த பொருள் இது எனச் சொல்ல வந்தது. பவர்க்கத்துக் கடைசி எழுத்தான'ம்' மந்திரத்தை ஜபிக்கிற ஜீவனைச் சொல்ல வந்தது. அதனால் பிரணவம் பெருமை மிக்க ஈச்வர சக்தியை உணர்த்தும். அகாரம் மூலாதாரத்திலும் உகாரம் இதயத்திலும் மகாரம் புருவநடுவிலும் உள்ளது. அதனால் நீயே பிரணவம் என ஆகமங்களால் புகழப்படுகிறாய். (பரம்பொருளைச் சொல்கிற ஒரே அக்ஷரம் ஓங்காரம். திரிபுரா என்ற தேவி பல மூன்றுகளாலானவள் என்று முன் சுலோகத்தில் கூறப்பெற்றது. ஓங்காரமும் மூன்று கூறுகளாலானது. அகாரம்-வாக்பவ கூடம், உகாரம் - காமகூடம். மகாரம் சக்தி கூடம். அதனால் ஸ்ரீவித்யையைப் போல் பிரணவமும் மூன்று கூடங்களாலானது. ஓங்காரத்தால் கூறப்பெறுபவள் (வாச்யம்) அதனைச் சொல்கிற ஓங்காரம் (வாசகம்) அதனை ஜபிக்கிற ஸாதகன் (வக்தா) என்று மூன்றும் தேவியே. அகாரம் பரம்பொருளான தேவி. உகாரம் அவளை உணர்த்துகிற மந்திரம். மகாரம் அதனை ஜபிப்பவன். பிரும்ம பிரணவமான அகார-உகார-மகாரங்கள் தேவியாக உகார மகார-அகாரமாக இடம் மாறி சக்தி பிரணவமாக உமா என்றானதென்பர்.) (22)

**गायत्री सशिरास्तुरीय सहिता सन्ध्यामयीत्यागमैः**
**आख्याता त्रिपुरे त्वमेव महतां शर्मप्रदा कर्मणाम् ।**
**[illegible]र्शन मुख्यशक्तिरपि च त्वं ब्रह्मकर्मेश्वरी**
**कर्ताऽर्हन् पुरुषो हरिश्च सविता बुद्धः शिवस्त्वं गुरुः ॥**

**காயத்ரீஸசிராஸ்துரீய - ஸஹிதா ஸந்த்த்யா மயீத்யாகமை:**
**ஆக்க்யாதா த்ரிபுரே த்வமேவ மஹதாம் சர்மப்ரதா கர்மணாம் ।**
**தத்தத்தர்சன - முக்க்ய சக்திரபி ச த்வம் ப்ரஹ்ம கர்மேச்வரீ**
**கர்த்தாSர்ஹன் புருஷோ ஹரிச்ச ஸவிதா புத்த: சிவஸ்த்வம் குரு: ॥**

திரிபுரையே ! சிரஸ்மந்திரமும் நான்காம்பாதமும் சேர்ந்த ஸந்தியா தேவியாக வழிபடப்படுகிற காயத்திரீ தேவி நீயே என்று

ஆகமங்களால் கூறப்பட்டுள்ளது. சிறந்த சடங்குகளுக்கு நற்பயனைத் தருபவளும் நீயே. அந்தந்த தரிசனங்கள் கண்டறிந்த சக்தியும் வேதாந்திகளின் பிரும்ஹமும் மீமாம்ஸகரின் பலனைத் தருகிற கர்மமும் சாக்தர்கள் குறிப்பிடுகிற ஈச்வரியும், தார்க்கிகரின் உலகைப்படைப்பவரும், அர்ஹத்(ஜினர்)தும், ஸாங்கியர்களின் புருஷரும் ஹரியும் ஸூரியனும் புத்தரும் சிவனும் குருவும் நீயே (காயத்ரியின் சிரஸ்-ஓமாபோ-பூர்ப்புவஸ்ஸுவரோம் என்ற மந்திரப் பகுதி. காயத்திரியின் நான்காம்பாதம் - பரோரஜஸே ஸாவதோம். பூர்ப்புவஸ்ஸுவ: என்ற வியாஹ்ருதிகள், காயத்திரியின் நான்கு பாதங்கள், காயத்திரீ சிரஸ் என்ற ஆறும் மஹாஷோடசியின் ஆறு கூடங்களும் ஸமமானவை.) (23)

अन्न-प्राण-मनःप्रबोध-परमानन्दैः शिरः-पक्षयुक्-
पुच्छात्म-प्रकटै-र्महोपनिषदां वाग्भिः प्रसिद्धीकृतैः ।
कोशैः पंचभिरेभि-रम्ब भवती-मेतत् प्रलीनामिति
ज्योतिः प्रज्वल-दुज्ज्वलात्मचपलां यो वेद स ब्रह्मवित् ॥

**அன்ன-ப்ராண-மன:-ப்ரபோத-பரமாணந்தை: சிர:- பக்ஷயுக்**
**புச்சாத்ம-ப்ரகடைர்-மஹோபநிஷதாம் வாக்பி: ப்ரஸித்தீக்ருதை:।**
**கோசை: பஞ்சபிரேபி-ரம்ப பவதீ-மேதத் ப்ரலீனாமிதி**
**ஜ்யோதி: ப்ரஜ்வல-துஜ்ஜ்வலாத்ம-சபலாம் யோ வேத ஸ ப்ரஹ்மவித்॥**

தாயே ! அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயம் என ஐந்து கோசங்கள். ஒவ்வொரு கோசத்திற்கும் தலை, இரு இறக்கைகள், வால், உடல் என்று உருவகப்படுத்துமிடம் உண்டு. இவை சிறந்த தைத்திரியோபநிஷத்தில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இந்த ஐந்து கோசங்களில் மறைந்துள்ளவளாக ஒளிமுகக் தீப்பிழம்பு போன்று ஒளிர்கின்ற மின்னல் கொடி போன்று ஆத்ம ஜ்யோதியாக உன்னை உணர்பவனே பிரும்ஹஜ்ஞானி. (24)

सच्चित्तत्त्वमसीति वाक्यविदितै-रध्यात्मविद्या-शिव-
ब्रह्माख्यै-रतुल-प्रभाव-महितै-स्तत्त्वैस्त्रिभिः सद्गुरोः ।

त्वद्रूपस्य मुखारविन्द-विवरात् संप्राप्य दीक्षा-मतो
यस्त्वां विन्दति तत्त्वत-स्तदह-मित्यार्ये स मुक्तो भवेत् ।।

ஸச்சித்-தத்-த்வமஸீதி வாக்யவிதிதை-ரத்த்யாத்ம-வித்யா-சிவ-
ப்ரஹ்மாக்க்யை-ரதுல-ப்ரபாவ-மஹிதைஸ்-தத்வைஸ்-த்ரிபி:
ஸத்குரோ:।
த்வத்ரூபஸ்ய முகாரவிந்த-விவராத் ஸம்ப்ராப்ய தீக்ஷாமதோ
யஸ்த்வாம் விந்ததி தத்வதஸ்-ததஹ-மித்யார்யே ஸ முக்தோ பவேத் ॥

*மதிப்பிற்குரியவளே ! உனது வடிவில் தோன்றிய நல்ல குருவால் அவரது தாமரை போன்ற முகத்திலிருந்து ஸத் த்வமஸி, (ஸத்தான பொருளாயுள்ளாய்) சித் த்வமஸி, (பேருணர்வாய் உள்ளாய்) தத் த்வமஸி (பரம்பொருளாயுள்ளாய்) எனப் பெரும் சக்திபெற்ற ஆத்மவித்யா தத்துவமும் சிவதத்துவமும் பிரும்ஹதத்துவமும் உபதேசிக்கப்பெற்று தீக்ஷை பெற்று உன்னை உணர்ந்தவன் அந்தப் பரம்பொருளே நான் என்ற நிலை எய்தி முக்தி பெறுவான். (மஹாவாக்ய உபதேசம் பெற்ற ஜ்ஞானியே ஸ்ரீவித்யை தீக்ஷைக்கு ஏற்றவன் என்றுரும். தீக்ஷை என்பது ஆத்மஜ்ஞானியும் ஸ்ரீவித்யா மந்திர ஸித்திபெற்றவருமாகிய குரு தன் சிஷ்யனின் உட்புகுந்து துலக்கி, ஆத்மஜ்ஞானம் அளித்து அந்த ஆத்மஸ்வரூபிணியான தேவியை ஸ்ரீவித்யா மந்திரத்தின் மூலம் காட்டித் தந்து தன்னைப் போல் அவனையும் தேவி ஸ்வரூபியாகச் செய்கிற யோகமுறை.) (25)*

सिद्धान्तै र्बहुभिः प्रमाण-गदितैरन्यैरविद्यातमो
नक्षत्रैरिव सर्वमन्धतमसं तावन्न निर्भिद्यते ।
यावत्ते सवितेव संमतमिदं नोदेति विश्वान्तरे
जन्तो-र्जन्म-विमोचनैकभिदुरं श्रीशाम्भवं[1] श्रीशिवे ।।

ஸித்தாந்தைர் பஹுபி: ப்ரமாண-கதிதை-ரன்யை-ரவித்யாதமோ
நக்ஷத்ரைரிவ ஸர்வமந்த்ததமஸம் தாவந்ந நிர்ப்பித்யதே।
யாவத்தே ஸவிதேவ ஸம்மத-மிதம் நோதேதி விச்வாந்தரே
ஜந்தோர்-ஜன்ம-விமோசனைகபிதுரம் ஸ்ரீசாம்பவம்[2] ஸ்ரீசிவே ॥

1. श्रीशांभवि 2. *ஸ்ரீ சாம்பவி*

*ஸ்ரீ சாம்ப்பவஜ்ஞான வடிவினளே ! சிறப்பு மிக்க மங்கள வடிவினளே ! (சிவனுடன் எவ்வகையிலும் வேறுபடாதவளே) பிறப்புரிமை என்ற ஒன்றை மட்டும் கொண்ட ஜந்துவிற்கு, பிறவியிலிருந்து விடுதலை தருவதில் தனித்துத் தேர்ந்த உனது சூர்யனுக்கொப்பான இந்த ஸ்ரீ சாம்பவஜ்ஞானம் விச்வமாகிச் சூழ்ந்துள்ள உலகின் உள்ளத்தில் உதிக்காத வரை, பிரமாண வாக்யங்களால் ஏற்கப்பட்ட நக்ஷத்திரங்கள் போன்ற பல தத்துவ ஆராய்வின் முடிவுகளால் அஜ்ஞானம் எனும் இருள் அகலாது. (அஜ்ஞானம் என்ற பேரிருள் சிறந்த யுக்தி வாதங்களால் அகலாது. ஸ்ரீ சாம்பவ ஜ்ஞானம் என்ற ஷடன்வயஜ்ஞானம் ஒன்றே ஸூரியன் போல் இருளை அகற்றவல்லது. சாம்பவீதிக்ஷை என்பது சிஷ்யனின் சிரஸில் காமேசுவரி-காமே ச்வரர்களின் ரக்த சுக்ல மிச்ர ஒளி கொண்ட சரணங்கள் பதியச்செய்து, அவற்றிலிருந்து அமுததாரை பெருகி சீடனின் உள்-வெளி அழுக்குகளை அகற்றித் தூய்மை பெறச் செய்வது. அதனால் ஹ்ருதயம் சிரஸ் முதலான ஆறு அங்கங்களில் நிறைந்த மந்திர சக்தி, மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களில் பரவுகிறது. ஆறு ஆம்நாய சக்திகளுடனும் ஆவரண தேவதைகளுடனும் தேவி சித்சக்தியாக உணரப்பெறுவாள். இது சாம்பவீ என்ற உணர்வு. (26)*

**आत्माऽसौ सकलेन्द्रियाश्रय-मनोबुद्ध्यादिभिः शो चितः**
**कर्माबद्धतनुर्जनिं च मरणं प्रैतीति यत्कारणम्।**
**तत्ते देवि महाविलास लहरी दिव्यायुधानां जयः**
**तस्मात् सद्गुरु मभ्युपेत्य कलयेत्त्वामेव चेन्मुच्यते ॥**

**ஆத்மாऽஸௌ ஸகலேந்த்ரியாச்ரய - மநோபுத்த்யாதிபி: சோசித:**
**கர்மாபத்ததனுர் - ஜனிஞ்ச மரணம் ப்ரைதீதி யத்காரணம்।**
**தத்தே தேவி மஹாவிலாஸ - லஹரீ திவ்யாயுதானாம் ஜய:-**
**தஸ்மாத் ஸத்குரு- மப்யுபேத்ய கலயேத் த்வாமேவ சேன்-முச்யதே ॥**

*தேவி ! இந்த ஜீவன் எல்லா இந்திரியங்களுக்கும் ஆதாரமான மனம் புத்தி முதலியவற்றால் துன்புற்றவன். வினையால் சரீரத்துடன் கட்டுண்டவன். பிறப்பையும் இறப்பையும் அடைகிறன். அதன் காரணம் உன் மாயா சக்தியின் விளையாட்டுப்*

பேரலையாகிற தெய்வத்தன்மை பெற்ற பாசாங்குசங்களின் வெற்றியே. அதனுல் ஸத்குருவைச் சரணடைந்து உம்மையறிந்து உம்மையே உள்ளத்தில் கொள்வானேயாகில் பிறப்பிறப்புத் தொடரிலிருந்து விடுபடுவான். (பாசம்-கட்டுவதில் ஆசை, அதற்குமாருக விடுவிப்பதில் இச்சை, முக்தியில் நாட்டம். அங்குசம் - கட்டுவதில் கோபம், அதற்குமாருக விடுவிப்பதில் உலகநிலை உணர்வெனும் ஞான சக்தி. கரும்புவில்லும் புஷ்பபாணங்களும் - கட்டுவதில் வெளிப்பொருள் நாட்டம், அதற்குமாருக விடுவிப்பதில் கிரியாசக்தியாகி தவம் முதலியதில் ஈடுபாடு. என்ற கட்டுகிற ஆயுதங்களே விடுவிக்கின்றன. (27)

नाना-योनि-सहस्र-संभव-वशाज्जाता जनन्यः कति
प्रख्याता जनकाः कियन्त इति मे सेत्स्यन्ति चाग्रे कति ।
एतेषां गणनैव नास्ति महतः संसारसिन्धो-र्विधेः
भीतं मां नितरा-मनन्यशरणं रक्षानुकम्पानिधे ॥

**நாஞ-யோனி-ஸஹஸ்ர-ஸம்ப்பவ-வசாஜ்ஜாதா ஜனன்ய: கதி**
**ப்ரக்க்யாதா ஜனகா: கியந்த இதி மே ஸேத்ஸ்யந்தி சாக்ரே கதி ।**
**ஏதேஷாம் கணனைவ நாஸ்தி மஹத: ஸம்ஸார- ஸிந்த்தோர் விதே:**
**பீதம் மாம் நிதரா-மனன்ய-சரணம் ரக்ஷானுகம்பா-நிதே ॥**

*பரிவின் வைப்பிடமே ! பல தடவைகளில் பல இனங்களில் ஆயிரக்கணக்கான பிறவி பெற்றதால் என்னைப்பெற்ற தாய்கள் எத்தனை ? தந்தை எனப் பெயர் பெற்றவர் எத்தனை பேர் ? இனி வரும் பிறவிகளில் பெற்ரேர் எத்தனை ? இவற்றை எண்ண முடியாது. பெருத்த ஸம்ஸாரக்கடலிலிருந்தும் விதியிடமிருந்தும் பயந்த, வேறு புகலிடமில்லாத என்னைக் காப்பாற்றுவாய். (28)*

देहक्षोभ-करै-र्व्रतै-र्बहुविधै-र्दानैश्च होमै-र्जपैः
सन्तानै-र्हयमेध-मुख्य-सुमखै-र्नानाविधैः कर्मभिः ।
यत्संकल्पविकल्पजाल-मलिनं प्राप्यं पदं तस्य ते
दूरादेव निवर्तते परतरं मातः पदं निर्मलम् ॥

**தேஹக்லேஷப-கரைர்-வ்ரதைர்: பஹுவிதைர்-தானைச்ச ஹோமைர்-ஜபை:**
**ஸந்தானைர்-ஹயமேத-முக்ய-ஸுமகைர் நானாவிதை: கர்மபி:।**
**யத்ஸங்கல்ப-விகல்ப-ஜால-மலினம் ப்ராப்யம் பதம் தஸ்ய தே**
**தூராதேவ நிவர்த்ததே பரதரம் மாத: பதம் நிர்மலம்॥**

*தாயே ! உடலை வருத்துகிற பல வகைப்பட்ட நோன்புகளாலும் தானங்களாலும் ஹோமங்களாலும் ஜபத்தாலும் நீண்ட நாள் தொடர்ந்த சடங்குகளாலும் அசுவமேதம் முதலிய பெருவேள்விகளாலும் இவ்வாறு பல சடங்குகளாலும் அடையப்பெறுகிற நிலை, விரும்பியதைப்பெற திட்டமிடுதலாலும் திட்டத்திற்கு மாறுபட்ட ஐயப்பாடுகளாலும் தெளிவாக இல்லை. மாசுபடிந்துள்ளது. அந்நிலைக்கு வெகுதூரத்தில் உனது நிலை உள்ளது. (29)*

पंचाशन्निजदेहजाक्षरमयै[1] र्नानाविधै र्धातुभिः
बह्वर्थैः पदवाक्य-मान-जनकै-रर्थाविनाभावितैः ।
साभिप्रायवदर्थ-कर्म-फलदैः ख्यातैरनन्तैरिदं
विश्वं व्याप्य चिदात्मनाऽहमहमित्युज्जृम्भसे मातृके ॥

**பஞ்சாசந்நிஜ-தேஹஜாக்ஷரமயைர்[2]-நானாவிதைர் தாதுபி:**
**பஹ்வர்த்தை: பதவாக்ய-மான-ஜனகை-ரர்த்தாவினா பாவிதை:।**
**ஸாபிப்ராயவதர்த்த-கர்ம-பலதை: க்யாதை ரனந்தை-ரிதம்**
**விச்வம் வ்யாப்ய சிதாத்மநாऽஹமஹமித்-யுஜ்ஜ்ரும்ப் பஸே மாத்ருகே॥**

*மாத்ருகாக்ஷரவடிவினளே ! (தாயே !) உமது உடலிலிருந்து உண்டான ஐம்பதக்ஷரங்களாலான பலவகை (வினைச்) சொற்கள் பலபொருள் கொண்டவை. பொருளை விட்டிராதவை. வியாகரணமும் தர்க்கமும் மீமாம்ஸையும் இவற்றை விளக்கவந்தவை. உட்கருத்து கொண்டு பொருளும் செயலும் பயனும் விளைவிப்பவை. எண்ணற்றவை. அறிஞர்களிடம் பரவியவை. அந்தச் சொற்களைக் கொண்டே பேரறிவு வடிவில்*

*1. भवै 2. பவைர்*

உலகம் முழுவதும் பரவி நின்று நான் நான் என்று கொட்டமடிக்கிறாய். (சித் என்ற பேரறிவு சொல்லிலும் பொருளிலும் பரவி அததனைத் தனித்தன்மையுடன் காட்டி நான் நான் என்று அடையாளம் காட்டச் செய்த பராஹந்தா- தேவி.) (30)

श्रीचक्रं श्रुतिमूलकोश इति ते संसारचक्रात्मकं
विख्यातं तदधिष्ठिताक्षर-शिवज्योतिर्मयं सर्वतः ।
एतन्मन्त्रमयात्मिकाभिररुणं श्रीसुन्दरीभिर्वृतं
मध्ये बैन्दवसिंहपीठललिते त्वं ब्रह्मविद्या शिवे ॥

**ஸ்ரீ சக்ரம் ச்ருதிமூலகோச இதி தே ஸம்ஸாரசக்ராத்மகம்**
**விக்க்யாதம் தததிஷ்ட்டிதாக்ஷர-சிவஜ்யோதிர்-மயம் ஸர்வத:।**
**ஏதன்மந்த்ரமயாத்மிகாபி ரருணம் ஸ்ரீஸுந்தரீபிர்-வ்ருதம்**
**மத்த்யே பைந்தவ-ஸிம் ஹபீடலலிதே த்வம் ப்ரஹ்ம-வித்யா சிவே ॥**

சிவையே! (மங்களமானவளே!) உனது ஸ்ரீ சக்ரம் அண்டமும் பிண்டமுமான உலகசக்கிரத்தின் உருவம், வேதத்தின் வேரான ஓங்காரத்தின் உறைவிடம் (கோசம்) என்று புகழ்பெற்றது. ஸ்ரீ சக்கிரத்தில் உள்ள அக்ஷரங்கள் (அந்தந்த ஆவரண தேவதையின் பீஜாக்ஷரமானவை) சிவனது பேரொளி. அவற்றில் ஆவரண தேவதைகள் உள்ளனர். செவ்வொளி கொண்ட அந்த மந்திர தேவதைகளான அழகுமிக்க ஸௌந்தரிகளால் ஸ்ரீ சக்ரம் சூழப்பட்டுள்ளது. அதன் நடுவிலுள்ள பிந்துவாலான ஸிம்ஹாஸனத்தில் பிரும்ஹவித்யையாக நீ அமர்ந்துள்ளாய். (தேவி உலகெங்கும் பரவியுள்ளாள். உலகம் ஸ்ரீ சக்கிரத்தின் உருவகம். உலகம் இருவகை அண்டமும் பிண்டமுமென. உலகமாகிய அண்டத்திலும் பரவியுள்ளாள், தனி உயிரினமாகிய பிண்டத்திலும் பரவியுள்ளாள். ஸ்ரீசக்ரத்தில் மாத்ருகாக்ஷரங்களும் (அ-க்ஷ) ஸ்ரீவித்யாவின் பதினைந்து அக்ஷரங்களும் இடம் பெற்றுள்ளன. ஸ்ரீவித்யையில் ஏ-ஈ என்ற இரு உயிர் எழுத்துக்களும் க-ல-ஹ-ஸ-ர என்ற ஐந்து மெய்யெழுத்துக்களும் பிந்துவுமுள்ளன. ல என்பது பூமி எனும் உலக ஆதாரம். ஸ என்பது சந்திரன் நக்ஷத்திரங்கள் கிரகங்கள் முதலியதைக் குறிப்பது. ஹ என்பது சிவனையும் ஆகாசத்தையும் குறிக்கும். ஈ என்பது பிரும்மத்திடமுள்ள ஸங்கல்ப சக்தி-மாயை. ஏ என்பது விஷ்ணு

சக்தி-உலகைக் காப்பாற்றுவது. ர என்பது அக்கினி. க என்பது உலகாக மாறுவதற்கான ஈச்வரியின் காமம். பிந்து சிவனும் சூனியமுமான ஸாக்ஷி. இவ்வாறு ஸம்ஸார சக்கிரத்தினுள் தேவி பரவியுள்ளாள். ஆவரண தேவதைகள் அனைவரும் சிவசக்தி ஸம்மேளனத்தில் வெளியான ஒளிக்கதிர்கள். பாவனோபநிஷத்தையும் கட்கமாலையையும் அனுஸந்தானம் செய்ய இது நன்கு புலப்படும்.) (31)

बिन्दु-प्राण-विसर्ग-जीवसहितं बिन्दु-त्रिबीजात्मकं
षट्कूटानि विपर्ययेण निगदेत् तारत्रिबालाक्षरैः ।
एभिः संपुटितं प्रजप्य विहरेत्प्रासाद-मन्त्रं परं
गुह्याद्गुह्यतमं सयोगजनितं सद्भोगमोक्षप्रदम् ॥

**பிந்து ப்ராண - விஸர்க்க - ஜீவஸஹிதம் பிந்து - த்ரிபீஜாத்மகம்**
**ஷட்கூடானி விபர்யயேண நிகதேத் தாரத்ரிபாலா - க்ஷரை:।**
**ஏபி: ஸம்புடிதம் ப்ரஜப்ய விஹரேத் - ப்ராஸாதமந்த்ரம் பரம்**
**குஹ்யாத் - குஹ்யதமம் ஸயோகஜநிதம் ஸத்போக - மோக்ஷப்ரதம்॥**

அனுஸ்வாரத்துடன் கூடிய ஹகாரம் (ஹம்) விஸர்கத்துடன் கூடிய ஸகாரம் (ஸ:) இந்த ஹம்ஸ: என்பது ஸோஹம் அம் ஹம்ஸ:, அ:ஸோஹம் என்று மூன்று கூட வடிவங்களைப் பெறும். இதனைத்திருப்பி வாசிக்க மற்றும் மூன்று கூடங்கள். ஆக ஆறு கூடங்கள். அவற்றுடன் ஓங்காரம், ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் என்ற பிரணவங்கள் மூன்று (த்ரிதாரீ) பாலா (ஐம் க்லீம் ஸௌ: என்ற மூன்று அக்ஷரங்கள்) இவற்றை முன்னும் பின்னும் ஸம்புடம் போல் இணைத்து பராப்ராஸாத மந்திரத்தை (ஹ்ஸௌ: ஸ்ஹௌ:) ஜபித்துக் கொண்டே பொழுதை இனிது கழிக்கவும். ரகசியத்திலும் மிக மிக ரகசியமானது. நல்ல இவ்வுலக இன்பமும் முக்தியும் தரவல்லது. (ओं ऐं ह्रीं श्रीं-ऐं क्लीं सौः हंसः सोहं अं हंसः अः सोहं-ह्सौः -स्हौः सोहं अः हंसः अं सोहं हंसः-सौः क्लीं ऐं-श्रीं ह्रीं ऐं ओं என்பது இந்த சுலோகம் விளக்குகிற மந்திரமாகும்.) மிக மிக ரஹஸ்யமெனில் குருமுகமாகத் தீக்ஷை பெற்று உபதேசம் பெறவேண்டியது. இங்கு அதனை அப்பட்டமாகத் தெரிவித்தது படத்தில் உள்ள தாயின் வடிவம் போன்று உயிரற்றது. தேவியும் குருவும்

பொறுத்தருள்வார்கள். சுலோகத்தை அப்படியே படிப்பது நல்லது. அதையும் குருமுகமாகப் பெறுவது சிறந்தது.) (32)

आताम्रार्क सहस्र दीप्ति परमा सौन्दर्यसारै-रलं
लोकातीत महोदयै रुपयुता सर्वोपमाऽगोचरैः ।
नानानर्घ्य-विभूषणै रगणितै र्जाज्वल्यमानाऽभितः
त्वं मातस्त्रिपुरारिसुन्दरि कुरु स्वान्ते निवासं मम ॥

**ஆதாம்ரார்க்க - ஸஹஸ்ர - தீப்தி -பரமா ஸௌந்தர்ய - ஸாரை - ரலம்**
**லோகாதீத - மஹோதயை - ருபயுதா ஸர்வோபமா(ऽ) கோசரை: ।**
**நானார்க்ய-விபூஷணை-ரகணிதைர்- ஜாஜ்வல்ய-மானாऽபித:**
**த்வம் மாதஸ் த்ரிபுராரி - ஸுந்தரி குரு ஸ்வாந்தே நிவாஸம் மம ॥**

*தாயே ! திரிபுரத்தை அழித்தவரின் அழகிய மனைவியே ! நீ என் உள்ளத்தில் வஸிப்பாயாக ! நீ ஆயிரம் ஸூரியர்களின் செவ்வொளியால் சிறந்தவள். வடிவழகு நிறைந்தவள். உலகைக் கடந்த பெருமையுடன் கூடியவள். விலையில்லாத எண்ணற்ற பலவகை ஆபரணங்களால் சுற்றிலும் பேரொளி பரப்புவள், அந்த நீ என் உள்ளத்தில் வசிப்பாய். (33)*

शिंजन्नूपुर-पादकंकण-महामुद्रासुलाक्षारसा-
लंकारांकित-पादपंकज-युगं श्रीपादुकालंकृतम् ।
उद्भास्वन्नखचन्द्रखण्ड रुचिरं राजज्जपासंनिभं
ब्रह्मादि त्रिदशासुरार्चितमहं मूर्ध्नि स्मराम्यम्बिके ॥

**சிஞ்ஜந்நூபுர-பாதகங்கண-மஹாமுத்ரா-ஸுலாக்ஷா-ரஸா-**
**லங்காராங்கித-பாதபங்கஜ-யுகம் ஸ்ரீபாதுகாலங்-க்ருதம் ।**
**உத்பாஸ்வந்-நகசந்த்ரகண்ட-ருசிரம் ராஜஜ் - ஜபா- ஸந்நிபம்**
**ப்ரம்ஹாதி - த்ரிதசாஸுரார்ச்சித-மஹம் மூர்த்னி ஸ்மராம்யம்பிகே ॥**

*அனைத்துக்காக்கிற தாயே ! உம் திருவடித்தாமரைகளிரண்டையும் தலைமீது இருப்பதாகத் தியானிக்கிறேன். அவை அழகிய பாதுகைகளால் அலங்கரிக்கப்பெற்றவை. ஒலிக்கின்ற தண்டைகளாலும் காப்புகளாலும் அழகானவை. அழகிய ரேகைகள் கொண்டவை, செம்பஞ்சுக் குழம்பு பூசியவை, சிறந்த*

ஒளி கொண்ட நகங்களாகிற பிறைச்சந்திரன்களால் அழகானவை. செம்பரத்தைப் பூ போன்ற வண்ணம் கொண்டவை. பிரும்மா முதலிய தேவர்களாலும் அஸுரர்களாலும் பூக்களால் அர்ச்சிக்கப்பெற்றவை. (34)

आरक्तच्छविनाऽतिमार्दवयुजा निश्वासहार्येण यत्
कौशेयेन विचित्ररत्नघटितैर्मुक्ताफलैरुज्ज्वलैः ।
कूजत्कांचन-किंकिणीभिरभितः सन्नद्धकांचीगुणैः
आदीप्तं सुनितम्बबिम्बमरुणं ते पूजयाम्यम्बिके ॥

ஆரக்தச்சவிநாऽதி-மார்த்தவயுஜா நிச்வாஸஹார்யேண யத்
கௌசேயேன விசித்ர-ரத்னகடிதைர்-முக்தாபலை-ருஜ்ஜ்வலை:।
கூஜத்காஞ்சன-கிங்கிணீபி-ரபித: ஸந்நத்த-காஞ்சீகுணை:
ஆதீப்தம் ஸுநிதம்ப-பிம்ப-மருணம் தே பூஜயாம்-யம்பிகே॥

அம்பிகையே ! உனது அழகிய இடுப்பு பிரதேசத்தை வழிபடுகிறேன். அது செந்நிறமும் மென்மையும் கொண்டதும் மூச்சுக்காற்றால் அகற்றப்படக் கூடியதுமான பட்டாடையாலும், பலவகை ரத்தினங்கள் பதிக்கப்பெற்றதும் ஒளிமிக்க முத்துக்களுள்ளதும் இனிதொலிக்கும் தங்கச் சதங்கைகளுடன் சுற்றி இணைக்கப்பெற்றதுமான இடுப்புச்சங்கிலிகளால் (அரைஞாண்களால்) துலங்குவது. சிவந்தது. அதனை வழிபடுகிறேன். (35)

कस्तूरी-घनसार-कुंकुमरजो-गन्धोत्कटै-श्चन्दनैः
आलिप्तं मणिमालयाऽतिरुचिरं ग्रैवेय-हारादिभिः ।
दीप्तं दिव्य-विभूषणै-र्जननि ते ज्योति-र्विभास्वत्कुच-
व्याज-स्वर्णघटद्वयं हरिहर-ब्रह्मादि-पीतं भजे ॥

கஸ்தூரீ-கனஸார-குங்குமரஜோ-கந்தோத்கடைச்-சந்தனை:
ஆலிப்தம் மணிமாலயாऽதிருசிரம் க்ரைவேய-ஹாராதிபி:।
தீப்தம் திவ்ய-விபூஷணைர்-ஜனனி தே ஜ்யோதிர்-விபாஸ்வத்-குச-
வ்யாஜ-ஸ்வர்ணகடத்வயம் ஹரிஹர-ப்ரஹ்மாதி-பீதம் பஜே॥

